உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௮.] விஷு ௵ சித்திரை மீ [பகுதி-௬.
Vol. 38. April—May 1941. No. 6.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1941.

Printed by Srimathu R. Shanmuga Rajeswara Naganatha Sethupathy Avl., and Published by Thiru. Narayana Iyengar at the Tamil Sangam Power Press, No. 54, Tamil Sangam Road, Madura.

# ஒரு வேண்டுகோள்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும் மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராசிரியர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும், பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவை சம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.

---

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### I. சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7. | *தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | *அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீகிருஷ்ணசரித்திரவிமர்சம் ... ... | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௮.] விஷு ௵ சித்திரை ௴ [பகுதி-௬.

Vol. 38. April—May 1941. No. 6.

## பரதாழ்வான்வைபவம்

[௨௨௪-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

பரதாழ்வான் இராமபிரானை அழைத்துவரவேண்டி, ராஜ மரியாதைக்குரிய சதுரங்கசேனையுடன் கங்கையின் வடகரைசென்றடையும்பொழுது தென்கரையிலிருந்த குகப்பெருமாள், படைவருதல்கண்டு, ராமபக்திபரவசனாய், 'இப்படை இராமன்மேல் போர்கருதிவரும்போலும்' என்று அதிசங்கைபண்ணி, அதனை எதிர்க்கக்கருதிநிற்குந்தருணத்தில், சுமந்திரன் பரதாழ்வானிடம் சொல்லிய குகப்ரபாவம்பேசக்கருதிய மஹாகவி,

கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவன் உயர்தோளான்
வெங்கரியின் ஏறனையான் விற்பிடித்த வேலையினான்
கொங்கலரும் நறுந்தண்டார்க் குகனென்னுங் குறியுடையான்.

கற்காணுந் திண்மையான் கரைகாணாக் காதலான்
அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோள் மழைகாணும் மணிநிறத்தோய்
நிற்காணு முள்ளத்தான் நெறியெதிர்நின் றனன்என்றான்.

என்கிறார். இவை யிங்கு பரதாழ்வான்வைபவம் கூறுதற்கு உறுப்பாக எடுத்துக்கொள்ளப்பட்டன.

இவற்றுள், கங்கையிருகரையுடையான் கணக்கிறந்த நாவாயான் என்றதன் கருத்து, நம்முன்னே எதிர்ப்பட்டுத் தோன்றுமவன், கங்கையாறு கடக்கவேண்டி இருகரையிலும் தங்கிநிற்கும் சனத்தொகுதிகளையும் பல பண்டத்திரள்களையும் கடப்பித்தற்குரிய அளவிறந்த நாவாய்களையுடையோன் ஆதலால் நம் சதுரங்கசேனைகளும் சனத்திரள்களும் கங்கையாறு கடந்துசெல்லும்படி நமக்குத் துணைசெய்யவேண்டுமவன் என்பதாம்.

இப்படி அவனை நாம் துணையாகப்பற்றுவது, கேவலலௌகிககார்யமன்றியே பாரலௌகிகமாகவும் நாம் அவனைப் பற்றவேண்டுமென்பான், உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவன் என்கிறான். இதன்கருத்து, உங்கள்குலமான ரகுகுலத்துக்கு நாதனாதலால் ரகுநாதனாகவும் தனிநாதனான எம்பெருமானாகவும் உள்ள இராமனுக்கு உயிர்போலும் தோழமையுடையோன்; அதனால் நாம் அவனைக் கௌரவிக்கவேண்டும்: என்பதாம்.

உயர்தோளான் என்றதன்கருத்து, இராமனுக்கு உயிர்த்துணைவனாயிருந்து அவனைப் பாதுகாத்தற்கு எற்ற தோள்வலியுடையோன், அவனை நாம் அநுவர்த்தனம்செய்யோமானால் அவன் நம்மை ராமவிரோதிகளென்றெண்ணிப் பகைத்துநிற்கவுங்கூடும்: என்பதாம்.

வேங்கரியின் ஏறனையான் என்றதன் கருத்து, பகைப்போரைக் குத்திக் கொல்லவல்ல வன்கண்மையும் வலியும் உடையன் என்பதும், அநுவர்த்திப்போரை ஆதரித்துத் தாங்குமியல்புமுடையன் என்பதுமாம்.

விற்பிடித்த வேலையினான் என்றது இராமனிடம் எத்தகைய பகைவரும் செல்லாதுகாக்கக்கருதியஇவன் தன்னந்தனியனல்லன். திமி திமிங்கிலங்கள்போன்ற வில்லாளிகளையுடையதாய் மகராலயத்தின் அலைகள்போலே வரிசைவரிசையாய் ஒன்றன்பின் ஒன்றாக வந்து மோதும் விற்படைகளுமுடையோன் என்பதாம்.

கோங்கலரும் நறுந்தண்டார்க் குகனென்னுங் குறியுடையான் என்றது, பகைமேற்செல்வானுயிற் சூரசங்காரஞ்செய்த குகனே என்று கண்டோரயிர்க்கும்படியான வீரத்தோற்றமுடையான். ஆனல் அவன் கடம்பலர்தாருடையோன், இவன் கொங்கலர் நறுந்தாருடையோன்: என்பதை அடையாளமாகக்கொண்டு வேறுபாடறிந்து தெளிதற்கு உரியோன் என்பதாம். இதனல் இவன் பகைத்து மேல்வரின் இவனை எதிர்த்துச்செல்லல் இயலாதென்பது குறிப்பு.

கற்காணுந் திண்மையான் என்றது, இவன் போர்குறித்து மேற்செலவுகருதாமலே குறுக்கிட்டுத் தடுத்துநிற்பானுனலும், இவனை எதிர்த்துக் கடந்துபோகக் கருதுவோர் குன்றுமுட்டிய குருவிபோல வலியிழந்தொழியும்படி மலைபோலச் சலியாமல்நிற்கும் திண்மையுடையான் என்பதாம். கல் ஈண்டு மலை.

கரைகாணுக் காதலான் என்றது, இவன், தன்னை நிராகரித்துச் செல்லக்கருதுமவரைத் தடுக்குமிடத்து மலைபோலத் திண்மையுடையவனுயிருந்தாலும், தன்னை அநுவர்த்தித்துப்போருமவர் என்றறிவானுனல் அப்போது அன்பின்பெருக்காலுண்டாகும் மனநெகிழ்ச்சியாலே கரையில்லாததொரு கடல்போலே அளவு கடந்த தண்மையும், நீர்மையும், இனிமையும், நேயமும் உடையனுயிருப்பன் என்பதாம். காதல் அன்பு. அது கரையென்ற குறிப்பால் கடலாய்ப் பின், காணு என்ற குறிப்பால் உவர்க்கடலையொழித்துக் கரைகாணுக்கடலனைய காதலான் என அபூதவுவமையாய்க் கடலுக்குரிய மணிகணங்கள்போலும் நீர்மை தண்மை இனிமை முதலிய குணகணங்களுடையான் என்பதுபட நின்றது.

அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான் என்றது, இருட்பிழம்பைக்கண்டால் இவனைக்கண்டாற்போலிருக்கும் எண்ணையுண்ட கருநிறமும், அழகும் அமைந்த இராமபிரான் திருமேனிபோலும் தர்சனத்துக்கு யோக்கியமான மேனியையுடையோன்: என்பதாம். இதனல், நாமே சென்று சேவிக்கத்தக்கான் என்பது குறிப்பு.

இவனை மஹாகவி தம் பேச்சாலே,

"சூழ விட்ட தொடுபுலி வாலினன்" (கங்கைப்படலம்-31)

"பற்றொ டுத்தன்ன பல்சூற் கவடியன்" (ஷை–32)

"நெற்றொ டுத்து நெரிந்த புருவத்தான்." (ஷை–32)

"பெண்ணை வன்செறும் பிற்பிறங் கிச்செறி
வண்ண வன்மயிர் வார்ந்துயர் முன்கையான்" (ஷை–33)

"கச்சொ டார்த்த கறைக்கதிர் வாளினன்
நச்சராவும் நடுக்குறு நோக்கினன்
பிச்ச ராமன்ன பேச்சினன் இந்திரன்
வச்சி ராயுதம் போலும் மருங்கினன்" (ஷை–34)

"ஊற்ற மேமிக ஊனொடு மீனுகர்
நாற்ற மேய நகையின் முகத்தினன்
சீற்ற மின்றியுந் தீயெழ நோக்குவான்
கூற்று மஞ்சக் குமுறுங் குரலினன்." (ஷை–35)

என்று முன்பு, தர்சனத்துக்கு யோக்கியமில்லாத குரூரரூபியாகச் சொன்னவர், இங்கு சுமந்திரன்பேச்சாலே, 'அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான்' என்றது, இவனை இராமன் தோழமை கொண்டதுகண்டிருந்த சுமந்திரனுக்கு இவனிடத்தில் ராமசாரூப்ய புத்தி பதிந்துகிடப்பதைத் தெரிவித்தபடி.

மற்காணும் திருநெடுந்தோள் மழைகாணும் மணிநிறத்தோய் என்றது, நீயும் அவனுக்கு தர்சநீயமான வலிபொருந்திய நீண்ட கரங்களையும் மழைமுகில்போலும் கரியநிறத்தையும் உடையையாய் மணிவண்ணனையொத்துவிளங்குகிறாய் என்பதாம்.

இவ்வாறு பகவத்ஸம்பந்தத்தால் கருநிறம் ஏற்றம்பெற்றதாயிற்று: இக்கருத்துக்கொண்டே,

"துறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவி லந்தணர் நுவலவும்படுமே." (புறம்–1)

என்றார் பிறரும்.

நிற்காணு முள்ளத்தான் நெறியெதிர்நின்றனன் என்றது, உன்னுடைய திருவுள்ளக்குறிப்பறிந்துகொண்டு தெரிசிக்கவேண்டும் என்னும் எண்ணமுடையவனாய், நெறியிடையே எதிர்நோக்கிநிற்கிறான். அது அவனைக் காணவிரும்பிநிற்கும் நமக்கு அவனைத் தேடிச் செல்லவேண்டாது கும்பிடப்போனதெய்வம் குறுக்கேவந்தாற்போலே மிகவும் நலமாயிற்று என்பதாம்.

இப்படி ஆப்தவாக்கியப்பிரமாணத்தாலே குகப்ரபாவமறிந்துகொண்ட பரதாழ்வானுடைய திருவுள்ளக்குறிப்பும் செயலும் சொல்லுவார்,

தன்முன்னே யவன்றன்மை தந்தைதுணை முந்துரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்
மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல்
என்முன்னே யவற்காண்பேன் யானேசென் றெனவெழுந்தான்.

என்கிறார்.

இதனுள், தன்முன் ஏய் அவன்தன்மை என்றது, இவன் தேடியடையவேண்டாது எளிதிலடையும்படி தனக்கு அபிமுகமாகவே எதிர்த்துறையிற்பொருந்திப் பரதன்வரவை யெதிர்பார்த்திருக்கும் குகப்பெருமானுடைய பகவத்பக்தி முதலான குணாதிசயங்களை என்பதாம்.

தந்தைதுணை என்றது, தன் தந்தைக்குத் துணையான மந்திரியாயும், தனக்குத் தந்தைபோல் ஆப்ததமனாயும் உள்ள சுமந்திரன் என்பதாம்.

முந்துரைத்தசோல் என்றது, முந்துசொல்லாய் அதாவது ஆப்தவாக்கியமாய்ப் பிரமாணங்களுளெல்லாம் முற்பட்டிருக்கும்படி சொல்லியசொல் என்பதாம்.

உரைத்தசொல்லாவது, லக்ஷக வ்யஞ்ஜக சப்தங்களான குறிப்புமொழிகளாகாது வாசகசப்தங்களான வெளிப்படைச்சொல்லாயுள்ள சொற்கள் என்றபடி.

சோல்முன்னே உவக்கின்ற என்றது, சுமந்திரன்சொல்லும் வாக்கியார்த்தபோதம்பின்னாகவும், அதனாலுண்டாதற்குரிய உவப்பு முன்னாகவும் இவனுக்குண்டாயிற்று என்று கவி கொண்டாடுகிறார். அதாவது ஆப்தவாக்கியம் நன்மையேபயக்கும் என்னும் அத்தியந்த விசுவாஸத்தாலே, சுமந்திரன் பேசத்தொடங்கும்போதே இவனுக்கு உவப்புண்டாயிற்றென்றபடி.

துரிசிலாத் திருமனத்தான் என்றது, பகவத்ஸம்பந்தமுடையாரிடத்தில் ஜாதி குலம் தொழில் முதலியவைபற்றித் தாழ்வுகருதுவது பாகவதசேவைசெய்பவர்க்குத்துரிசு (தோஷம்) ஆகும். அந்தத் தோஷம் சிறிதும் இவனுக்கு இல்லாமையாலே அத்தோஷமில்லாமையே இவன்மனத்துக்கு அழகாயமைந்துள்ளது. அதனாலே இவன் துரிசிலாத்திருமனத்தானாயினான் என்பதாம். இதனால் பாகவதசேவைசெய்பவர்க்குரிய அதிகாரநியமம் சொல்லியபடி.

மன்முன்னே தழீஇக்கோண்ட மனக்கினிய துணைவனேல் என்முன்னே என்றது, பகவத்ஸம்பந்தம், எம்பெருமானால் திருமேனி தீண்டப்பெற்றாலே அமையும்; அவனால் 'மதீயன்' (என்னவன்) என்றபிமானிக்கப்பெற்றாலே அமையும்; அவனால் 'இவன் எனக்குத் துணை'யென்று சொல்லப்பெற்றாலே அமையும்; இவன் இம்மூன்று விதத்தாலும் சம்பந்தம்பெற்றிருக்கும்போது இவனை நான் அடையாது விடலாகாது; இவன் எனக்கு முன்னவனான தமையனும் எம்பெருமானுமேயாவன்: என்பதாம். என்முன் - என்தமயன்.

அவற்காண்பேன் யானேசேன்று என எழுந்தான் என்றது, காட்சியின் வேட்கைமிகுதியால், பிறிதொருதுணைவேண்டாது, தானே சென்று அவனை(குகனை)க் காண்பேனென்று எழுந்தான் என்பதாம்.

பின்பு,

> என்றெழுந்து தம்பியோடு மெழுகின்ற காதலோடும்
> குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரைகுறுகி
> நின்றவனை நோக்கினன் திருமேனி நிலையுணர்ந்தான்
> துன்றுகரு நறுங்குஞ்சி யெயினர்கோன் துண்ணென்றான்.

என்கிறார்.

இதனுள், என்றெழுந்து தம்பியோடு மெழுகின்ற காதலோடும் என்றதன் குறிப்பு, 'யானே சென்று அவற்காண்பேன்' என்று சொல்லிக்கொண்டு தன்னந்தனியனு யெழுந்தானுயினும், இவனை விட்டுப் பிரிந்தறியாத அணுக்கத்தொண்டனுய்ப் பாகவதசேவை (அடியார் வழிபாடு)செய்து கைவந்தவனுன சத்துருக்கனுழ்வான் வழிகாட்டிவர, குகதர்சனத்தில் இவனுக்குள்ள ஆசைப்பாடும் மேன்மேல் வளர்வடைந்துவர இவ் விரண்டுதுணையுங்கொண்டு (சென்றுன்) என்பதாம்.

இதனுல், பாகவதசேவார்த்தியாய்ச்செல்லும்போதும் பாகவத சேவைசெய்து கைவந்தவர்துணைகொண்டு செல்லவேண்டுமென்பதும் வெறுங்கையராய்ச்செல்லாது ஏதேனும் இன்புறத்தகுவது கொண்டு செல்லவேண்டும் என்பதும் காட்டியவாறு.

குன்றெழுந்துசென்றதென என்றது, முன்பு குகசன்னிவேசத்தை 'விற்பிடித்தவேலை' (கடல்) என்றுர். அக்கடலையெதிர்கொண்டு காணும் இவனைக் குன்று (மலை) என்கிறுர். இதனுல் இவனுக்குள்ள உயர்வும், குகனுக்குள்ள தாழ்வும் லௌகிகதிருஷ்டிகொண்டு காட்டித் தாழ்ந்தோரைநோக்கியெழுந்துசெல்ல வியலாத கௌரவமுடைய இவன், குகனைநோக்கிச்செல்லும் செலவு, நிலையாய்நிற்கும் மலை கடலைநோக்கியெழுந்துசெல்லும் செலவுபோலும் என்று அபூதவுவமையால் ஆச்சரியம் காட்டியவாறு.

இதனுல் எத்துணை உயர்வுடையோரும் பாகவதசேவையில் தம் உயர்வைச் சிறிதும் நினையாமல் அவர்க்குள்ள பகவத்ஸம்பந்தமொன்றேகொண்டு மனம்பற்றவேண்டுமென்பதாயிற்று.

குளிர் கங்கை என்றது, கங்கைத்தீம்புனலுடனான இராமபிரான் முடிசூடல் தவிர்ந்து கானகம்புகுந்ததுகண்டு, மனக்கொதிப்படைந்திருந்தநிலையில், பரதாழ்வான் இராமபிரானை முடிசூட்டற்கு அழைத்துச்செல்லவந்தமை தெரிந்து மனங்குளிர்ந்தகங்கை என்பதாம்.

கரை குறுகி நின்றவனை நோக்கினன் என்றது, முன்பு பரதாழ்வானைப் பாராமலே நெடுந்தூரத்தே படைவருதல்கண்டு பகை கொண்டுவருவான் என்று அநுமானித்தான்; இப்போது கங்கைக் கரையளவும் வந்து கிட்டிநிற்றலால் பரதாழ்வானைக் கண்கொண்டு பார்த்தான் என்பதாம்.

திருமேனிநிலையுணர்ந்தான் என்றது, வைரகவசம்பூண்டு உடைவாள்வீக்கி வில்லுங்கையுமாய் நிமிர்ந்து பரிமாவூர்ந்துவருவானென்றெண்ணியிருந்ததோற்றமின்றியே விரதத்தால் இளைத்திருப்பதே அழகாயமைந்திருக்கும்படி வாடி மெலிந்து துவண்டிருக்கும் மெய்யின்நிலைமையை உணர்ந்தான் என்பதாம்.

துன்று கரு நறுங்குஞ்சி யெயினர்கோன் துண்ணென்றான் என்றது, போர்குறித்துவருகிறான் என்றெண்ணி, அவனை எதிர்த்துத் தாக்கக் கருதி, இறுகக்கூட்டிமுடித்துப் போர்ப்பூச்சூடிநிற்றலால் நறுமணங் கமழுங் குஞ்சியையுடைய வேடர்தலைவனான குகன், தான் நினைத்திருந்த நினைவும், இப்போது அவனைக் கண்கொண்டுகண்டதோற்றமும் மாறுபட்டிருப்பதுகண்டு, இதென்ன ஆச்சரியம்! இந்திரஜாலம் போலிருக்கிறதே! என்று மனத்துணுக்கமுற்றான் என்பதாம்.

இங்ஙனம் துணுக்கமுற்றவனாய் அவனுண்மைநிலையறியவேண்டும் என்று எண்ணி, அவனை இவன் ஆராயுமாறுகூறுவார்,

வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

என்கிறார்.

இதனுள், வற்கலையினுடையானைக் கண்ணுற்றான் என்றது, இவன் ராஜ்யாபிஷேகம்பெற்றவனாயிருந்தால் நாகரிகமான பொற்பட்டாடை புனைந்திருப்பான், அங்ஙனமின்றியே காடுவாழ்சாதிகள் உடுத்தற்குரிய மரவுரியைத் தனக்கு மிகவும் இனிய உடையாகக் கட்டிக்கொண்டவனாயிருக்கிறான். அதனால் இவன் அரசாளும் முடிசூடப்பெற்றவனல்லன் என்று எண்ணினான் என்பதாம்.

மாசடைந்த மெய்யானைக் கண்ணுற்றான் என்றது, இவன் முடிசூடப்பெற்றவனாயிருந்தால் மங்கலப்புனல்கொண்டு உடல்மாசு கழுவி, மால்யாநுலேபநாதிகளாலே அலங்கிருதனாய்க் காதங்கமழும் பரிமளமும், காண்டற்கினிய காட்சியுமுடையனாயிருப்பன், அங்ஙனமின்றிக் கால்நடைகொண்டு காட்டிடைவருதலால் காற்றுவீசும் தூசிமண்டித் தேசொழிய மாசுபடர்ந்த மெய்யுடைமையால் இவன் முடிசூடிவந்தவனல்லன்; தவநிலையுடையோன்போலும்: என்று எண்ணினான் என்பதாம்.

நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக் கண்ணுற்றான் என்றது, முடிசூடியவனாயிருந்தால், மனமகிழ்ச்சியால் முகம் தளதளத்துப் பதினாறுகலையும் நிரம்பிய முழுமதிபோ லொளிதிகழா நிற்கும். அங்ஙனமின்றிப் பூரணகிரஹணபீடிதனான முழுமதிபோல் ஒளியிழந்த முகமுடையனாயிருத்தலால் மனத்தகத்தேகொண்டதொரு பெருங்குறையுடையன்போலும்: என்று எண்ணினான் என்பதாம்.

கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான் என்றது, கண்ணில்லாத அசேதனமான கல்லும் கண்ணுடையதாய் இவனைக் கண்டால் கனிந்து கரையும்படியான மிக்க துயரை இவன் மனத்தகத்தே கொண்டுவருதலால் இவனுக்கு இன்றியமையாததொரு பெரும் பொருட்பேறிழந்தவன்போலும் என்று எண்ணினான் என்பதாம்.

விற் கையினின் றிடைவீழ விம்முற்றுநின்றொழிந்தான் என்றது, இவ்வாறாகவருபவன் போர்குறித்துவருபவனல்லன் என்றுணரவே இவன்கையில் போர்வாய்த்ததென்று கருதிப் பிடித்திருந்த வில் தானே தரையிடைவிழுமாறு மெய்ம்மறந்தவனாய்ச் சிறிதுபொழுது நின்று பின் அது தீர்ந்து உணர்வுடையனானான் என்பதாம்.

பரதன் போர்குறித்துவருபவனல்லன் (பகையல்லன்) என்று தெளிந்தானாயினும், எம்பெருமானுக்கு அன்புடையனோ? அல்லனோ? என்னும் ஐயுறவுடையனாய்த் தெளியக்கருதிய குகப்பெருமாள்பேச்சாலே, மஹாகவி,

> நம்பியுமென் நாயகனை ஒக்கின்றான் அயல்நின்றான்
> தம்பியையும் ஒக்கின்றான் தவவேடம் தலைநின்றான்
> துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றான்
> எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பென்றான்.

என்கிறார்.

இதனுள், நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான் என்றது, எம்பெருமானுக்குத் தம்பியாதலால் எனக்கும் எம்பிமுறையோனான பரதனும், எனக்கு நாயகனாயுள்ள இராமபிரான் தன்தம்பியாகிய இளையபெருமாளிடத்தில் மிகவும் அன்புடையனாயிருப்பதுபோலே, தன்தம்பியாகிய சத்துருக்கனாழ்வானிடத்துமிகவும் அன்புடையனாயிருக்கிறான்: என்பதாம். இதனால் பரதனுக்குள்ள சஹோதர வாத்ஸல்யம் அறியப்பட்டதாயிற்று.

'அயல்நின்றான் தம்பியையும் ஒக்கின்றான்' என்றது, அப்பரதாழ்வானுக்கருகேநிற்பவனான சத்துருக்கனனும், எம்பெருமானிடத்தில் அன்போடு அருகேநின்று வழிபாடுசெய்துகொண்டு போரும் இளையபெருமாளைப்போலே பரதனுக்குத்தம்பியாய் அவனிடத்தில் அன்போடு வழிபாடுசெய்துபோருகிறான் என்பதாம். இதனால் சத்துருக்கனனுக்குள்ள சகோதரவாத்ஸல்யம் அறியப்பட்டதாயிற்று.

தவவேடம் தலைநின்றான் என்றது, சடைமுடி முதலிய புறநிலையொழுக்கமும், உற்றநோய்நோன்றல் முதலிய அகநிலையொழுக்கமுமாகிய தவவொழுக்கத்தை மேற்கொண்டவனாயுள்ளான் என்பதாம். இதனால், இவன் ஒருவருக்கும் ஒரு தீங்கும் செய்பவனல்லன் என்று அறிந்தான் என்பதாயிற்று.

துன்பமோரு முடிவில்லை என்றது, இன்றியமையாததொரு பெரும்பொருளையிழந்து வருந்துபவன்போலே காணப்படுகிறான் என்பதாம். இதனால் இராமன்பிரிவுக்குமிகவும் ஆற்றாதான்போலும் என்று அறிந்தானாயிற்று.

திசைநோக்கித் தொழுகின்றான் என்றது, இராமன்சென்ற திசைநோக்கிச்சென்று அவனுக்கு வழிபாடுசெய்துகொண்டிருக்கக் கருதினான்போலும்: என்பதாம்.

எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு என்றது, 'நம்பியும் என் நாயகனையொக்கின்றான் அயல்நின்றான் தம்பியையுமொக்கின்றான்' என்றதனால் இவனறிந்தபடியை நினைந்தவனாய், எம்பெருமான் பின்பிறந்தார் மூவருள் இளையபெருமாளும் சத்துருக்கனனும் சகோதரவாத்ஸல்யமுடையராயிருக்கும்போது, அவருடன்பிறந்த பரதன், தனக்கு முன்னவனான இராமனுக்கு விரோதியாயிருப்பானென்றெண்ணுவது தகுதியன்று என்றுணர்ந்தான் என்பதாம்.

இன்னும், பரதன் இங்குவந்த காரியம் இன்னதென்று அவன் மனக்குறிப்பறியவிரும்பும் குகன்செயல்கூறக்கருதியவர்,

> உண்டிடுக்கணொன்றுடையான் உலையாத அன்புடையான்
> கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பெல்லாம்
> கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்கள் நெறியென்னாத்
> தண்டுறையோர் நாவாயில் ஒருதனியே தான்வந்தான்,

என்கிறார்.

இதன்கருத்து, 'உண்மையான இடுக்கணென்றுடையனுன இவன், அடைந்தாரிடத்தில் ஒருநாளும் உலையாத அன்புடையனுன இராமபிரான்கொண்டிருந்த தவவேடங்கொண்டிருந்தானுயினும், "தொழுதகையுள்ளும் படையொடுங்கும் ஒன்னர் — அழுதகண் ணீரும் அனைத்து" என்பதுபற்றிச்சேய்மைக்கண்ணின்றதோற்றங் கண்டு துணிதல்கூடாது; பொய்யான கானலும் நீர்நிலைபோலத் தோன்றுவதுண்டு; மெய்யான நீர்நிலையும் கானல்போலத் தோன்றுவதுண்டு; இவ்விரண்டும் கிட்டிச்சென்று கண்டபிறகே உண்மை புலப்படுமாதலால், இடுக்கணுற்றவனுயும் தவவேடங் கொண்டவனுயும் காணப்படும் இவனுட்குறிப்பெல்லாம் இவனைக் கிட்டிச்சென்று கண்டுவருகின்றேன்; நான் வருமளவும் நெறி காப்பாளராகிய நீங்கள், (பகைவர் யானைகள்மேலேறி நீந்திக் கங்கை யாறுகடந்து இக்கரை சார்ந்தாலும் சார்வர்; அங்ஙனம் சாராது) நெறிதோறும்நின்று காப்பீராக' என்று கட்டளையிட்டுப் பரதனேடு ஏகாந்தமாயிருந்து கலந்துபேசி, அவன் மனக்குறிப்பறியக்கருதித் தன்னந்தனியனுய் ஒரு தண்ணந்துறையைநோக்கி நாவாயிலேறி வந்தான் என்பதாம்.

திரு. நாராயணையங்கார்,

பத்திராசிரியர்.

---

ஸ்ரீ:

# முக்கூடற்பள்ளு

[உசசஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

30-ஆம் பக்கம் 47-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'அவற்கிது' என்றிருப்பது, இதன் முதலடியில் 'ஊரன்' என்னாது 'ஊரர்' என்றதற்கியைய 'அவர்க்கிது' என்றிருக்கவேண்டும்.

30-ஆம் பக்கம் 48-ஆம் பாட்டின் முதலடியில், 'புள்ளினஞ் சரியவே..........புள்ளினம் இரியவே' என்றிருப்பது, 'புளினஞ் சரியவே......புளினமிரியவே' என்று இருக்கவேண்டும். புளினம் - மணல்திடர். புள் இனம் - வண்டினம், அல்லது பறவையினம்.

32-ஆம் பக்கம் 50-ஆம் செய்யுளின் முதலடியில், 'பொதிகை வரைக்கும்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'பொதியவரைக்கும்' என்றிருப்பிற் சிறக்கும்.

34-ஆம் பக்கம் 53-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'எழுந்த' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'வெளுத்த' என்றிருப்பிற் பொருள் சிறக்கும்.

35-ஆம் பக்கம் 54-ஆம் செய்யுளின் 3-ஆம் அடியில், 'சாய்த்துப்பார்ப்பாராம்' என்றிருப்பது, ஏட்டில், 'சாய்த்துநிற்பாராம்' என்றுள்ளது. 4-ஆம் அடியில், 'பள்ளனைப்பரமார்த்தியென்பாராம்' என்றிருப்பது, ஏட்டிற்கண்டபடி 'பள்ளன்பரமார்த்தியென்பாராம்' என்று இருப்பின் ஓசையின்பமுடையதாகும்.

36-ஆம் பக்கம் 57-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'தொட்டியர்காளைமட்டிபோல் வேந்து' என்றிருப்பது, ஏட்டில் 'தொட்டியேர்க்காளைமட்டிபோல்வந்து' என்று காணப்படுமாறிருப்பிற் பொருந்துமென்று தோன்றுகிறது. தொட்டியேர்க்காளை - தொட்டியில் ஊறல்நீர்குடிக்கும் உழவுமாடு. தொட்டியில் நீர்குடிக்கும் உழவு மாடுகள் சில கண்ணைமூடிக்கொண்டு குடித்தல் இயல்பு. இது,

குடும்பன், முக்கூடற்பள்ளிமனைக்குவந்து, அவள் இடுஞ் சோற்றை அவள்முகம்நோக்கா துண்டுசெல்லற் குவமம். வேந்து என்றுள்ள பாடத்துக்கு யாதோரியையுமின்மையால் வந்து என்றுள்ளபாடம் அமைவுடையதாகும்.

37-ஆம் பக்கம் 58-ஆம் செய்யுளின் முதலடியில், 'மாற்றவள் தன்சொற்கேளா' என்றிருப்பது, வட்டிலுள்ளபடி 'மாற்றவள்சோற் கேளா' என்றிருக்கலாம்.

38-ஆம் பக்கம் 63-ஆம் பாட்டின் 3, 4-ஆம் அடியில், 'மரு தூர் கச்சற்காய்ப்பள்ளி' என்றிருப்பது, வட்டிலுள்ளவாறு 'மரு தூர்க் கச்சற்காய்ப்பள்ளி' என்றிருக்கவேண்டும்.

40-ஆம் பக்கம் 68-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், 'கலக வேற்கை' என்றிருப்பது, 'கலகவேட்கை' என்று வட்டிற் காணப் படுகிறது.

44-ஆம் பக்கம் 75-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'கோதி லானந்தச்சாதி இடையன்' என்றிருப்பது, வட்டில் உள்ளவாறு 'கோதிலானந்தன்சாதியிடையன்' என்றிருக்கலாமென்று தோன்று கிறது. நந்தன் - கண்ணனை வளர்த்த இடையர்தலைவன்.

47-ஆம் பக்கம் 84-ஆம் பாட்டின் முதலடியில், 'இடையரைக் கோண்டே' என்றிருப்பது, 'இடையரைக்கண்டே' என்றும், 2-ஆம் அடியில் 'கிடை நமக்கு' என்றிருப்பது, 'கிடை தனக்கு' என்றும், 4-ஆம் அடியில், 'படைதொடுத்து' என்றிருப்பது, 'படைதொடுத்த' என்றும் வட்டிலுள்ளன. இதன் 3-ஆம் அடியில் 'அடைவுபட்ட செய்தி'யென்பதற்குப் பொருந்தியசெய்தியென்று பொருள்கொள் ளல் தகும்.

49-ஆம் பக்கம் 86-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், 'மனந்தனில்' என்றிருப்பது, 'மனத்தினில்' என்றும், 4-ஆம் அடியில் 'பருக்கவே' என்றிருப்பது, 'பரிக்கவே' என்றும் வட்டிலுள்ளவாறு இருப்பிற் சந்த இன்பமும் பொருட்சிறப்பும் உடையனவாகும்.

50-ஆம் பக்கம் 87-ஆம் செய்யுளின் 3-ஆம் அடியில், 'இங்ங்கே', 'அங்ங்கே' என்றுள்ளவை, ஏட்டில் 'இங்கே' 'அங்கே' என்று காணப்படுகின்றன.

52-ஆம் பக்கம் 89-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'சிக்கென' என்றிருப்பது, ஏட்டிலுள்ளவாறு 'சவுக்கினில்' என்றிருக்கலாமென்று தோன்றுகிறது.

52-ஆம் பக்கம் 90-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'குட்டையில்' என்றிருப்பது, 'மாத்தினில்' என்று ஏட்டிலுள்ளது.

53-ஆம் பக்கம் 91-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'வைத்து' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'வைத்த' என்றிருக்கலாம்.

55-ஆம் பக்கம் 93-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'பள்ளன் தன்காலில்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'பள்ளன்காலில்' என்றிருப்பிற் சிறக்கும்.

56-ஆம் பக்கம் 96-ஆம் பாட்டின் முதலடியில், 'நயினாரே-ஏரு விண்ணப்பம்' என்றிருப்பது, 'நயினாரே சோல வேன்ருழ்விண்ணப்பம்' என்றும், 2-ஆம் அடியில் 'மூத்தவன்-எதுக்கோ' என்றிருப்பது, 'மூக்தவன் அவன் எதுக்கோ' என்றும் ஏட்டுப்பிரதியில் உள்ளன. ஏட்டுப்பாடம் 3, 4 அடிகளின் இறுதிச்சீர்களோடு அளவால் ஒத்தமைதலின் இயைபுடையதென்று தோன்றுகிறது.

57-ஆம் பக்கம் 99-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'வாய்த் தண்ணீர் குடித்தாலுங் கொப்புளித்தாலும் ஆமே' என்றிருப்பது, 'வாய்த்தண்ணீர் குடித்தலுங் கொப்புளித்தலுமாமே' என்று இருக்க வேண்டுமென்றுதோன்றுகிறது. 'இதன்பொருள்: வாயிற்கொண்ட நீரைக் கொண்டார்விரும்பியவாறு குடிக்கலுமாகும், கொப்பளிக்கலுமாகும்; அதுபோல உன்வயமான என்னை நீ விரும்பியவாறு சிறைசெய்விக்கவும் சிறைவிடுவிக்கவும்வல்லை என்பது.

60-ஆம் பக்கம் 105-ஆம் செய்யுளின் 2-ஆம் அடியில், 'பள்ளு பிள்ளைக்கிணை'யென்றிருப்பது 'பள்ளுப்பிள்ளைக்கிணை' என்றிருக்க வேண்டும். இதன்பொருள் பள்ளன் மகனையொப்பான் என்பது.

60-ஆம் பக்கம் 106-ஆம் பாட்டின் முதலடியில், 'சட்டமேற் சட்டம் பிழைத்தாலும் பெண்பிள்ளை ஆண்டே' என்றிருப்பது, ஏட்டி லுள்ளபடி, 'சட்டமுன்சட்டம் பிணைதானு மேன்பிணை யாண்டே' என்றிருக்கலாமென்றுதோன்றுகிறது. பிணைதானும் என்பிணை - (இனி இவன் தவறுன் என்பதற்கு) உத்தரவாதியும் நானே. இன் னும் இவ்வடியில், சொன்னேன்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளவாறு 'சொன்னுன்' என்றிருப்பினும் பொருந்தும்.

60-ஆம் பக்கம் 107-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'செய்த பின்பு' என்றிருப்பது, 'செய்ததற்பின்' என்றும், 3-ஆம் அடியில், 'காத்திருந்து' என்றிருப்பது, 'காத்துநின்று' என்றும், 4-ஆம் அடி யில், 'மாட்டுவகை சொன்னுனே' என்றிருப்பது, 'மாட்டுவர்க்கஞ் சொல்வானே' என்றும் ஏட்டுப்பிரதியிலுள்ளன.

61-ஆம் பக்கம் 108-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், 'கல்லுண் டைப்பூம்பாளை' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'கல்லுண்டை பூம்பாளை' என்று இருக்கவேண்டும்.

61-ஆம் பக்கம் 109-ஆம் பாட்டின் முதலடியில், 'குற்ருலன்' என்றிருப்பது, 'குராலன்' என்றும், 2-ஆம் அடியில் 'புல்லைக்கரும் போரான்' என்றிருப்பது, 'புல்லை கரும்போரான்' என்றும், 'மயிலைக் கழற்சிக்கண்ணன்' என்றிருப்பது, 'மயிலை கழற்சிக்கண்ணன்' என் றும், 3-ஆம் அடியில், 'படைப்புப்பிடுங்கி' என்றிருப்பது, 'படப் புப்பிடுங்கி' என்றும், 'பசுக்காத்தான்' என்றிருப்பது, 'பசுக்காலன்' என்றும், 4-ஆம் அடியில் 'விதத்திலுண்டாயிரந்தான்' என்றிருப் பது, 'விதத்திலுண்டாயிரமேர்' என்றும் ஏட்டிலுள்ளபாடம் பொருந் துவதாகும். குராலன் - புகர்நிறமுடையகாளை. புல்லை, கரும் போரான், மயிலை, கழற்சிக்கண்ணன்: என்பவை தனித்தனி

மாட்டின் பெயர்களாதலின், 'புல்லை கரும்போரான்' 'மயிலை கழற்சிக் கண்ணன்' எனக் ககரவொற்றிரட்டாதுவருதலே முறையாகும். படப்பு - வைக்கோற்போர். படப்புப்பிடுங்கி - ஒரு மாட்டின்பெயர். அணிற்காலன் என்பதுபோலப் பசுக்காலன் என்பதும் மாட்டுவகையுள் ஒன்று. மட்டைக்கொம்பன் - நேரே ஓங்கிவளராது, பின்புறமேனும் பக்கங்களிலேனும் வளைந்த கொம்புடைய காளை.

62-ஆம் பக்கம் 110-ஆம் பாட்டின் முதலடியில், 'தனுவாங்கி' என்றிருப்பது, தனுவாளி' என்றும், 2-ஆம் அடியில், 'வளைக்கை' என்றிருப்பது, 'வள்ளைக்கை'யென்றும், 3-ஆம் அடியில், 'வகையேழும் அந்த எழுமரத்தாற்செய்தே' என்றிருப்பது, 'வகையேழுங்கிளையேழு மரத்தாற்சேர்த்தே' என்றும் ஏட்டிலுள்ளபாடம் அமைவுடையதாகும். தனு - வில். வாளி - அம்பு. வள்ளைக்கை - கசமரத்தை நுகத்தடியோடிணைக்கும் மரக்கருவி.

62-ஆம் பக்கம் 111-ஆம் பாட்டின் முதலடியில், 'எங்கள் அழகருடன்' என்றிருப்பது, 'எங்களிராமருடன்' என்றும், 2-ஆம் அடியில் 'பாசவடக்கயிறுயிரம்' என்றிருப்பது, 'பாசத்தால்வடக்கயிறுயிரம்' என்றும் ஏட்டில் உள்ளன. குத்தி - கலப்பைக்குத்தி - ஏர்க்காலின் அடிப்புறத்திணைந்து நிலத்தை உழுங் கருவி. இதன் நுனியில் இரும்பாலியன்ற கொழு ஏறிடப்பட்டிருக்கும். மேழி - குத்தியின் நடுவே அதன்பின்புறம்வரை ஊடுருவியுள்ள ஏர்க்காலின் அடிப்புறத்தோடிணைந்து வளைந்துநிற்கும் ஒரு மரவுறுப்பு; உழுங்காற் கலப்பை பிறழாதவாறு மேழியாகிய இவ்வுறுப்பை இடக்கையால் அழுத்திப்பிடித்துக்கொண்டு உழவர் உழுவர்.

63-ஆம் பக்கம் 112-ஆம் பாட்டின் முதலடியில், 'முதலாகச்' என்றிருப்பது, 'முதலான' என்றும், 2-ஆம் அடியில், 'சொல்லியபின்' என்றிருப்பது, 'சொன்னதற்பின்' என்றும், 4-ஆம் அடியில், 'குடும்பனுடன்' என்றிருப்பது, 'குடும்பனுக்கு' என்றும் ஏட்டிலுள்ளவாறிருப்பிற் சிறக்கும்.

63-ஆம் பக்கம் 113-ஆம் பாட்டின் முதலடியில், 'தைதுலக் கரணம்' என்றிருப்பது, ஏட்டில் 'தந்திக்கரணம்' என்றுள்ளது.

64-ஆம் பக்கம் 115-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், 'மறிப்ப னேனவே' என்றிருப்பது, ஏட்டிலுள்ளவாறு, 'மறிப்பனேன்றே' என் றிருப்பின் ஓசையின்பமுடையதாகும்.

64-ஆம் பக்கம் 116-ஆம் பாட்டின் முதலடியில், 'தொடர்ந்து என்றிருப்பது, 'தொடர்ந்த' என்று ஏட்டிலுள்ளவாறிருப்பிற் சிறக் கும். 65-ஆம் பக்கம் இதன் 3-ஆம் அடியில், 'புள்ளின்கடைவாய்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'புள்ளினிகர்வாய்' என்றிருப்பின் ஓசையின்பமும் பொருட்சிறப்புமுடையதாகும். புள் - பறவை - பகாசுரன். நிகர்வாய் - மாறுபட்டவாய்.

65-ஆம் பக்கம் 117-ஆம் பாட்டின் முதலடியில், 'மதயானை முதற்பிடிக்கவல்லாய் - இந்த மாட்டுக்கு' என்றிருப்பது, 'மதயானை தனைப்பிடிக்கவல்லாய் - நீ ஒருமாட்டுக்கு' என்றும், 2-ஆம் அடியில், 'அந்தபலம்' என்றிருப்பது, 'அந்தப்பலம்' என்றும், 'கண்டிலேனு னேன்றோடி' என்றிருப்பது, 'கண்டிலேனேனவோடி' என்றும், ஏட்டுப்பிரதியில் உள்ளன.

66-ஆம் பக்கம் 120-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'மீளவும்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'மீட்டுமோர்' என்றிருப்பிற் பொருந் தும்.

66-ஆம் பக்கம் 123-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'ஆண்டை யைப்போ யந்தச்சேதி விண்டான்' என்றிருப்பது, 'ஆண்டவர்க்கந்தச் செய்தி விண்டான்' என்று அல்லது 'ஆண்டவர்க்குகந்தசெய்திவிண் டான்' என்று ஏட்டில் உள்ளவாறிருப்பிற் சிறக்கும்.

67-ஆம் பக்கம் 125-ஆம் பாட்டின் முதலடியில், 'மறுத்து' என்றிருப்பது 'மறித்து' என்றும், 2-ஆம் அடியில், 'தொளிக்குச் சமைந்த' என்றிருப்பது, 'தொளிக்குட் சமைந்த' என்றும், 3-ஆம்

அடியில், 'வைத்தநாற்றை' என்றிருப்பது, 'வகுந்துநாற்றை' என்றும், 68-ஆம் பக்கம் 4-ஆம் அடியில், 'கலந்துபோகாமல்பதியும்' என்றிருப்பது, 'கலந்துபோகாமல் பாங்காப்பதியும்' என்றும் ஏட்டிலுள்ளபடியிருத்தல் பொருத்தமுடையதாகும்.

72-ஆம் பக்கம் 132-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'பள்ளன் புரவி' என்றிருப்பது, 'பள்ளர்விரவி' என்றும், 4-ஆம் அடியில், 'போலே' என்றிருப்பது, 'போலவே' என்றும் ஏட்டில் உள்ள பாடம் பொருட்பொருத்தமும் ஓசைநயமும் உடையது.

73-ஆம் பக்கம் 134-ஆம் பாட்டின் முதலடியில், 'தேடி என்' றிருப்பது, 'தேட' என்றும், 'சிற்ருற்றுக்கால்பற்றிலே' என்றிருப்பது, 'சிற்ருற்றுக்காற்பற்றிலே' என்றும், 2-ஆம் அடியில், 'உழுந் தோழிற்படு பழந்தோளிப்புனல் உடைச்சுமுடங்கல் நடச்செய்தே' என்றிருப்பது, 'உழுந்தோளிப்புனல் உடைச்சியுஞ்சின்னச் சடைச்சியுங்கூடி நடச்செய்தே' என்றும் ஏட்டிலுள்ள பாடம் பொருட்பொருத்தமும் சிறப்பும் உடையதாகும்.

74-ஆம் பக்கம் 135-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'நாற்று நடச்செய்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளவாறு 'நாற்றுநட்டசெய்' என்றிருக்கவேண்டும்.

75-ஆம் பக்கம் 136-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், 'பூட்டிக் காட்டி' என்றிருப்பது, 'புட்டில்காட்டிப்' என்றும், 4-ஆம் அடியில், 'கதிர்முளைத்தே' என்றிருப்பது, 'கதிர்முதிர்ந்தே' என்றும் ஏட்டில் உள்ளவாறிருப்பிற் பொருள்சிறக்கும். புட்டில் - அம்புக்கூடு. அம்புக்கூடு நெற்பயிரின் பொதிக்குவமை.

75-ஆம் பக்கம் 137-ஆம் பாட்டின் முதலடியில், 'தேற்ற' என்றிருப்பது, 'தேற' என்றும், 4-ஆம் ஆடியில், 'நெருங்கிக்கதிரரிந்தார்' என்றிருப்பது, 'நெருங்கியரிந்தார்' என்றும் ஏட்டிலுள்ளபடியிருப்பின் எதுகை நயமும் ஓசையின்பமும் உடையவாகும்.

75-ஆம் பக்கம் 138-ஆம் பாட்டின் முதலடியில், 'கதிர்கட்டி யிறுக்கி' என்றிருப்பது, 'கதிரிறுக்கி' என்றும், 2-ஆம் அடியில், 'சுமைகள் எடுப்பார்' என்றிருப்பது, 'சுமைகொண்டுய்ப்பார்' என்றும், 3-ஆம் அடியில், 'பிணையிற்பிணைப்பார்' என்றிருப்பது, 'பிணையல்பிணைப்பார்' என்றும், 'பெற்றுக்கோடுப்பார்' என்று இருப்பது, 'பேர்த்துக்கோடுப்பார்' என்றும், 4-ஆம் அடியில், 'பொடிவைக்கோலைத்தவிர்ப்பார்' என்றிருப்பது, 'பொடிவைக்கோலைப்பிடிப்பார்' என்றும், ஏட்டிலுள்ளவாறிருப்பிற் பொருட்சிறப்புடையனவாகும். பிணையல்பிணைப்பார் - பிணையலாகக்கட்டுவார். பிணையல் - ஒன்றோடொன்று இணைத்துக்கட்டப்பட்ட மாட்டின் கூட்டம். பேர்த்துக்கொடுப்பார் - மாடுகள் நடத்தலால் பதிந்த வைக்கோலைத் தொடுகைக்கம்பினால்பேர்த்துக்கிண்டிக்கொடுப்பார். பொடிவைக்கோலைப் பிடிப்பார் என்றது மாடுகள் நடத்தலால் சிதைந்து நொருங்கிய வைக்கோற்றுண்டுகளை வாளிப்புமாற்றால் அரித்தெடுப்பார் என்றவாறு.

76-ஆம் பக்கம் 139-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், 'மடத்துக்குவேண்டுஞ் செந்நெல்' என்றிருப்பது, 'மடத்துக்கென்றுஞ்சிலநெல்' என்றும், 4-ஆம் அடியில், 'சிறப்பமைய' என்றிருப்பது, 'சிறப்புக்குங்கை' என்றும் ஏட்டில் உள்ளன.

76-ஆம் பக்கம் 141-ஆம் பாட்டின் முதலடியில், 'கேளும்' என்றிருப்பது, 'கேளீர்' என்று ஏட்டிலுள்ளது.

77-ஆம் பக்கம் 142-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'வகையில் நேருஞ்சம்பா' என்றிருப்பது, 'வகையார்நெடுஞ்சம்பா' என்றும், 'வகையார்நறுஞ்சம்பா' என்றும் ஏட்டில் உள்ளது.

77-ஆம் பக்கம் 143-ஆம் பாட்டின் முதலடியில், 'திருநாள்படி' என்றிருப்பது, 'திருநாட்படி' என்றும், 'வகைக்காயிரங்கோட்டை' என்றிருப்பது, 'வகைக்காறாயிரங்கோட்டை' என்றும் ஏட்டில்

உள்ளன. இவற்றுள் முன்னது திருநாள்படி என இயல்பாய்வருதற்கு விதியின்மையின் திருநாட்படியென்றே இருக்கவேண்டும்.

77-ஆம் பக்கம் 144-ஆம் பாட்டின் முதலடியிறுதியில், 'பண்ணே' என்றிருப்பது, 'தன்னே' என்றும், 2-ஆம் அடியில் 'பெற்றுக்குடும்பன்' என்றிருப்பது, 'பெற்றுன்குடும்பன்' என்றும், 'புள்ளியில்கண்டபெருவெள்ளை' என்றிருப்பது, 'புள்ளியிற்பெருவெள்ளை' என்றும் ஏட்டிற் காணப்படுகின்றன.

77-ஆம் பக்கம் 145-ஆம் பாட்டின் முதலடியில், 'மண்டகப் படிச்சாத்துக்' கென்றிருப்பது, 'மண்டகப்படித்தரத்துக்' கென்றும், 'வகையாயிரங்கோட்டை' என்றிருப்பது, 'வகைக்காயிரங்கோட்டை' என்றும், 'கட்டைமுண்டன்' என்றிருப்பது, 'மலேமுண்டன்' என்றும், 'கருமுண்டன்' என்றும், 2-ஆம் அடியில், 'வெள்ளைநெல்லளங் தேன்' என்றிருப்பது, 'வெள்ளையளங்தேன்' என்றும் ஏட்டில் உள்ளன.

78-ஆம் பக்கம் 146-ஆம் பாட்டின் முதலடியில், 'மறையோருக் கும்' என்றிருப்பது, 'மறையோர்க்கும்நெல்' என்றும், 2-ஆம் அடியில், 'முதலிட்ட' என்றிருப்பது, 'பயிரிட்ட' என்றும், 'நெல்லளங் தேன்' என்றிருப்பது, 'நெல்லிலளங்தேன்' என்றும், 147-ஆம் பாட்டின் முதலடியில், 'பூசைநெல்' என்றிருப்பது, 'பூசைக்குநெல்' என்றும், 1, 2 அடிகளில், 'மோண்டிப் போதுவன் புதுத்திருத்திற் கண்ட' என்றிருப்பது, 'சின்னப்போதுவன்திருத்தலிலேகண்ட' என்றும் ஏட்டிற் காணப்படுகின்றன.

78, 79-ஆம் பக்கம் 150-ஆம் பாட்டில், 'கேளாரோ' என்று வருமிடமெல்லாம் 'கேளீரோ' என்றும், இச்செய்யுளின் முதலடியில், 'ஆந்தை முக்குமுஞ்சிப்பண்ணே' என்றிருப்பது, 'ஆந்தை முஞ்சிமுகப்பண்ணே' என்றும் ஏட்டிற் காணப்படும்பாடம் பொருந்துமென்றுதோன்றுகிறது.

79-ஆம் பக்கம் 151-ஆம் பாட்டின் முதலடியில், 'பள்ளனுக்கு மருதூரிற்பள்ளி' என்றிருப்பது, 'பள்ளனுக்குத் தேன்மருதூர்ப்பள்ளி' என்றும், 2-ஆம் அடியில், 'பிள்ளையாரடியில் உறைநெல்லும்' என்றிருப்பது, 'பிள்ளையாரடியுமுறைநெல்லும்' என்றும், 'பெற்றநெல்' என்றிருப்பது, 'பேத்திநெல்' என்றும், 3-ஆம் அடியில், 'உள்ள போரேனக்கு' என்றிருப்பது, 'உள்ளபேறேனக்கு' என்றும், 4-ஆம் அடியில் 'மட்டுந்தந்தான்' என்றிருப்பது, 'மட்டுத்தந்தான்' என்றும் ஏட்டுப்பிரதியிற் காணப்படுகின்றன. இவற்றுள், 'பிள்ளையாரடியுமுறைநெல்லும்,' 'உள்ளபேறேனக்கு', 'இம்மட்டுத்தந்தான்' என்றுள்ள ஏட்டுப்பாடங்கள் பொருட்சிறப்புடையன. பிள்ளையாரடி - பிள்ளையாரின்கீழுள்ள நெல். பிள்ளையார் விநாயகர். களமர், நெல்லைத் தூற்றிக் குவித்துச் சுளகுமுனையாற் பொலியைத்தொட்டுக்கொண்டு பொலியை மும்முறை சூழ்வந்து, சுளகுநிறைய நெல்லை அள்ளிப் பொலியின் ஒருமுனையிற் சுளகைப் பதித்து, அதில், எருவினாற் பிள்ளையாரமைத்து அறுகுகொண்டு பூசித்துப் பின் பொலியளத்தல் மரபு. அச்சுளகுநெல்லைப் பிள்ளையாரடியென்பது வழக்கு. பேறு - பங்கு.

81-ஆம் பக்கம் 153-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'தெரியுமடி' என்றிருப்பது, ஏட்டில் 'தெரியும்' என்று காணப்படுகிறது. ஏட்டுப்பாடம் சந்தத்தோடமைவுடையது.

81-ஆம் பக்கம் 154-ஆம் பாட்டின் முதலடியின்பிற்பாதி, 'தன்னூர்விட்டுன்போல ஒட்டுச்சாய்ப்பில்' என்றிருப்பது, ஏட்டினுள், 'தன்னூர்விட்டுனைப்போலோட்டுச் சார்பில்' என்று காணப்படுகிறது. இதனுள், 'சாய்ப்பில்' என்பதினும், 'சார்பில்' என்பது பொருட்பொருத்தமுடையதென்று தோன்றுகிறது.

82-ஆம் பக்கம் 156-ஆம் பாட்டின் ஈற்றடியில், 'வீட்டில், எய்திற்காட்டு நாவிபூனைக் கிணையாமோடி' என்றிருப்பதினும், 'வீட்டில் எய்திற்காட்டுப்பூனை நாவிக் கிணையாமோடி' என்று ஏட்டிலுள்ள

பாடம் பொருத்தமுடைத்து. இது 157-ஆம் பாட்டின் முக்கூடற் பள்ளிகூற்றாலும் விளங்கும்.

83-ஆம் பக்கம் 160-ஆம் பாட்டின் முதலடியில், 'வகைவந் தால்' என்றிருப்பது, 'வசம்வந்தால்' என்றும், 2-ஆம் அடியில், 'சந்தியில் மாங்கோட்டைபோடி' என்றிருப்பது, 'சந்தையில் மானங் கேட்டாய்' என்றும், ஷைபக்கம் 161-ஆம் பாட்டின் ஈற்றடியில், 'கண்ணனல்லோடி' என்றிருப்பது, 'பெம்மானல்லோடி' என்றும் ஏட்டிற் காணப்படும் பாடம் பொருட்சிறப்புடைத்து. இவற்றுள், 'பெம்மானல்லோடி'யென்பது மோனைநயமும் வாய்ந்தது. அன்றி யும், 164-ஆம் செய்யுளின் இறுதியில், மோனையமைதியுடன் 'கண்ணனல்லோடி' என்று வருதலால், இங்குப் 'பெம்மானல்லோடி' என்ற பாடமே கொள்ளத்தகும்.

84-ஆம் பக்கம் 162-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'நாச்சியா ரை' என்றிருப்பதினும், ஏட்டிற் காணப்படும் 'ஆய்ச்சியரை' என்ற பாடம் பொருட்பொருத்தமுடைத்து. ஆய்ச்சியர் - கோவியர் - இடைப்பெண்கள். இன்னும் இப்பாட்டின் இறுதியடியில் 'கையிட் டானுங்கள்' என்றிருப்பதினும், 'கையிட்டானும்' என்றுள்ள ஏட்டுப் பாடம் சந்தஅமைதியுடையது.

87-ஆம் பக்கம் 170-ஆம் பாட்டின் ஈற்றடியில், 'சீதனல்லோடி' என்றிருப்பது, ஏட்டினுள், 'நாதனல்லோடி' என்றும், 'சீதரனடி' என்றும் காணப்படுகிறது.

88-ஆம் பக்கம் 172-ஆம் செய்யுளின் முதலடியிறுதி, 'சொல்ல லாமோடி' என்றிருப்பதினும், ஏட்டிலுள்ளபடி 'செப்புவார்களோ' என்றிருப்பின் மோனைநயமும் அமையும்.

88-ஆம் பக்கம் 173-ஆம் பாட்டின் முற்பாதியில், 'மூப்பிளமை பார்த்துத்தலைசாய்ப்பார்' என்றது இருவரிடை வாக்குவாதம் நேர்ந்தவழி அவருட் பெரியோர்மாட்டுச் சிறியோர் தலைவணங்கி நிற்பர் என்று உலகியல்கூறியபடி.

89-ஆம் பக்கம் 175-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'வேழமேன்று' என்றிருப்பது, 'வேழமன்று' என்றும், 4-ஆம் அடியில் 'வைணவர்கள்' என்றிருப்பது, 'வைணவரும்' என்றும் ஏட்டிற் காணப்படுகின்றன. இவற்றுள் 'வேழமென்று சொன்னதிருட்பேர்' என்ற பாடத்துக்குப் பொருளியையின்மையால், 'வேழமன்று சொன்னதிருப்பேர்' என்ற ஏட்டுப்பாடம் பொருந்தியதாகும். வேழம் - கஜேந்திரன். அன்று சொன்னதிருப்பேர் - அக்காலத்து (முதலையாலிடர்ப்பட்டபோது) அழைத்த மூலமே என்ற திருநாமம். முதலடியால் திருமகள்விஷயமாய் வாழ்த்துக்கூறிய ஆசிரியர், இவ்விரண்டாமடியால் ஜகத்காரணவஸ்துவான திருமால் விஷயமான வாழ்த்தும் கூறியதாகக்கோடல் அமைவுடையதாகுமென்றுதோன்றுகிறது.

T. K. இராமாநுஜையங்கார்,
உதவிப்பத்திராசிரியர்.

---

ஸ்ரீ:

# மதிப்புரை



உரைநடைக்கோவை முதற்பகுதியும் இரண்டாம்பகுதியும்:— இவை, அண்ணாமலை பல்கலைக் கழகத்துத் தமிழ்ப்பேராசிரியரான திருவாளர் பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியாரவர்கள் பல தமிழ்ப் பேரவைகளிற்பேசிய விரிவுரைகளில் ஒருசிலவற்றைத் தொகுத்து அச்சிடப்பெற்றுள்ளவை. முதற்பகுதி விலை ரூ 1—4—0. இரண்டாம்பகுதி விலை ரூ 1—0—0. வேண்டுவோர் செட்டியாரவர்களுக்கு எழுதிப் பெறலாம்.

அவற்றுள், முதற்பகுதியில், சன்மார்க்கம் இறைவனருள் அடியார்கடமை சைவசமயவிளக்கம் ஞானத்தின்திருவுரு அன்பின் திருவுரு என்னும் இப்பொருள்களைப்பற்றி அறியத்தகும் சைவ சமயக்கோட்பாடுகள்பலவும் படிப்பவர் நன்குணர்ந்துகொள்ளுமாறு தெள்ளிய தமிழ்நடையில் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள், பெரும்பாகம், கடவுளுண்மைகருதும் பிறசமயத்தாருங்கொண்டொழுகுதற்குரியநெறிகளை விளங்கக்கூறுதலால், சைவர்களையன்றிச் சமயவுணர்வுநாடும் அறிவுடையோரெல்லாராலும் கொண்டாடத்தகும். சமயவுணர்வு குன்றிவரும் இக்காலத்தில் இத்தகைய புத்தகங்கள் மிகப் பயன்படத்தக்கன. இப்புத்தகத்தில், அண்ணாமலை பல்கலைக்கழகத்துத்தமிழ்ப்பேராசிரியர், பல்கலைப்புலவர் திரு. கா. சுப்பிரமணியபிள்ளை M.A., B.L. அவர்கள் ஆடிநிழலில் அகல்விசும்புபோல, இந்நூற்பொருளெல்லாம் நுணுகியடங்குமாறெழுதிய சிறப்புப்பாயிரம் சேர்க்கப்பெற்றிருக்கிறது. அதனால் இதன் பொருளடக்கமெல்லாம் நன்குணரலாகும்.

இரண்டாம்பகுதியில், தமிழ்வளர்ச்சிக்குரிய விரிவுரைகளும் இலக்கியக்கட்டுரைகளும் அடங்கியுள்ளன. அவை தமிழ்வளர்ச்சி கருதிய தமிழறிஞரெல்லோர்க்கும் பயன்படத்தக்கன.

இப்புத்தகங்களையெழுதியுதவிய பண்டிதமணியவர்கள் தம் கல்வியறிவாற்றல்களால் தம் கடமையை நன்குபுரிந்துவருவது தமிழறிஞர்களால் பாராட்டத்தக்கது.

---

புலவருலகம் (முதல்தொகுதியின் 1-வது புத்தகம்):— இது, இம்மதுரையம்பதியிலிருந்து மாதந்தோறும் வெளிவருவது. இதன் ஆசிரியர் திருக்குறட்குமரேசவெண்பா பாஞ்சாலங்குறிச்சிவீரசரிதம் முதலிய அரும்பெருநூல்களின் ஆசிரியரான திரு. ஜெகவீரபாண்டியனாவர். இதில், மகத்துவமுடைய அகத்தியர் முதலிய சங்கத்துச்சான்றோர்களும் திருத்தக்கதேவர் கம்பர் முதலிய பிற்காலத்தான்றோர்களும் ஆகிய புலவர்பெருமக்களின் வாழ்க்கைவரலாறுகளும் கவித்திறங்களும் உவமைநயங்களும் உள்ளுறைவளங்களும் அவர்கள் உலகிற்குணர்த்திய உணர்வுறுதிகளும் ஆதியவை, எவரும் எளிதில் தெளிந்து பயனுறும்வண்ணம் எழுதி வெளியிடப்பெறுமென்று தெரிகிறது. இம்முதற்பகுதியில், ஆசிரியர், தம் நண்பர் சிலருடைய கருத்துப்படி, அப்புலவர்களுள், கல்வியிற் பெரிய கம்பன்கலைநிலையை வெளியிடத்தொடங்கி, முதலில் பொதுவாகப் புலவர்நிலை, கவிஞர்பெருமை, பாவலர்படைப்புநிலை, கவிநிலை, மொழிநிலை, கவியின்பெருமை என்றின்னோரன்னவற்றைத் தக்க மேற்கோள்களுடன் இனிது விளக்கியிருக்கிறார். பின்னர், கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பரதுகலைநிலையை ஆராயப்புகுந்து, முதலிற் கம்பரதுசரித்திரத்தை ஒருவாறு சுருக்கிவரைந்து, பின், கம்பரைப் பற்றியும் அவரியற்றிய இராமாவதாரநூலினைப்பற்றியும் கூறும் சிறப்புப்பாயிரச்செய்யுட்களுட் சிலவற்றின் பொருணயங்களை விளக்கியிருக்கிறார். திருக்குறட்குமரேசவெண்பா பாஞ்சாலங்குறிச்சி வீரசரிதம் முதலியவற்றைப் படித்தவர்களுக்கு இதன் ஆசிரியரைப்பற்றியும் அவரியற்றும் செய்யுளும் உரையும் வசனமுமாதியவற்றைப்பற்றியும் இங்கு விரித்து வரையப்புகுவது மிகையாகும். ஆசிரியருடைய இந்த நன்முயற்சி விரைந்து முற்றுப்பெறுவதாகுக. மாதந்தோறும் ஆராய்ச்சிமுறையில் 40 பக்கத்துக்குக்குறையாமல் அச்சிடப்பெற்று வெளிவரும் இப்புலவருலகின் வருடச்சந்தா ரூபா. 4. கிடைக்குமிடம்:—மானேஜர், திருவள்ளுவர் நிலையம், 127 மேலமாசிவீதி, மதுரை.

---

விக்கிரம பொங்கல்மலர் (வாலாஜாபாத் இந்துமதபாடசாலையின் 24-ஆம் ஆண்டறிக்கை):—செங்கற்பட்டிலிருந்து அரக்கோணம் செல்லும் புகைவண்டித்தொடர்மார்க்கத்திலுள்ள வாலாஜாபாத் தென்னும் நகரில் பாலாற்றங்கரையில் அமைந்து, தென்னாட்டுக்குரு குலம் என்று பாராட்டுந் தகுதிவாய்ந்துள்ள இந்துமதபாடசாலை யானது, தான் தோன்றிய சிலஆண்டுகளுக்குள், தன்னைத் தோற்று வித்தவர்நன்முயற்சியாற் பலதுறைகளிலும் வளர்ச்சியடைந்து, பலநூறு மாணவர் மாணவிகள் தங்கி அரிய கல்வியும் உரியதொழி லும் உயரியவொழுக்கமும் பயின்று சிறப்படையும்வண்ணம் உதவி வருவது பலரும் அறிந்ததொன்றே. இவ்வறிக்கையால் இப்பாட சாலையின் ஒவ்வொருறுப்பும் ஆற்றிவரும் நற்பணிகளின் விவரமும், அவற்றைக் கண்ணுற்ற புலவரும் பொருளாளரும் முதலான பெரு மக்கள் அளித்த நன்மதிப்புரைகளும் அறியலாகும். இக் குருகுல மானது மேலும்மேலும் வளர்ந்து தன்பால்வரும் மாணவர்களை யெல்லாம் உயர்தமிழ்ப்புலவராக்கும்நிலையையும் அடைந்து விளங்குமாறு இதனை ஆதரிப்பது தமிழ்மக்கள்கடமையாகும். கல்வியறிவுடைய மக்கள் பலர் ஜீவனோபாயமில்லாது துன்புறும் இக்காலத்தில் தன் மாணவர்க்கெல்லாம் உயிரினும் சிறந்த ஒழுக்க நெறியும் ஜீவனோபாயமான தொழிற்றுறையறிவும் உடற்பயிற்சியும் உலகியலறிவும் உயர்கலையறிவும் நல்கிவரும் இக்குருகுலத்தில் தமி ழிளஞ்சிறுவர் பல்லாயிரவர் பயின்று நற்பயன் அடைவார்களாக. இன்னும் இதனைப்பற்றிய விவரம் அறியவிரும்புவோர், வாலாஜா பாத் இந்துமதபாடசாலையின் செயலாளர்க்கெழுதியறியலாம்.

---

திருஞானசம்பந்தர் திருப்பள்ளியெழுச்சியும் திருவேரக வருக்க மாலையும்:—இவை, தேவகோட்டை பாலகவி வயிநாகரம் திரு. வே. இராமநாதன்செட்டியாரவர்களால், தம் 25, 26-ஆம் ஆண்டுநிறைவு களுக்கு அறிகுறியாக இயற்றப்பெற்றவை. இனிமையும் தெளி வும் விரவிய நடையுடையவை. ஆண்டுநிறைவின் அறிகுறியாக உலகியல்விவகாரங்களிற்புகாது இவற்றையியற்றிய செட்டியாரவர்க ளுடைய தமிழ்ப்பற்றும் கடவுட்பத்தியும் அடியார்பற்றும் நன்கு மதிக்கத்தக்கன. வேண்டுவோர் ஆசிரியரிடம் பெறலாம்.

---

தொண்டர்மாலை:—இது, சென்னை, திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்கத்தின் எட்டாவது வெளியீடாகும். இதில், தென்னரங்கமேய திருமால்பக்கல் ஈடுபாடுமிக்க மன்னியசீர்த்தொண்டரடிப்பொடி யாழ்வார் அருளிச்செய்த திருமாலை திருப்பள்ளியெழுச்சியென்னும் திவ்யப்ரபந்தங்களும், தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ. கோபாலாசாரியாரவர் கள் 100 தமிழ்க்கவிகளாக இயற்றிய தொண்டரடிப்பொடியாழ்வார் சரிதமாகிய திருத்தொண்டர்காதையும், இவற்றுக்கு அங்கமாக ஷை தமிழ்ச்சங்கக் காரியதரிசி ஸ்ரீ. ப. ரே. திருமலை ஐயங்காரவர்கள் எழுதிய முகவுரையும் ஷை சங்கத்தலைவர் ஸ்ரீ. R. கேசவையங்கா ரவர்கள் எழுதியுதவிய அரிய முன்னுரையும் நல்ல காகிதத்தில் அழ காக அச்சிடப்பெற்றுள்ளன. இத்திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்கம், தன் வெளியீடுகளால் செந்தமிழ்மொழியும் திருமால்சமய மும் இனிது தழைய முயல்வதாகுக. இது கிடைக்குமிடம்:— காரியதரிசி, திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கம், 42 A, வெங்கட ரங்கம்பிள்ளை தெரு, திருவல்லிக்கேணி, சென்னை.

---

விஷு வருஷ திருக்கணித பஞ்சாங்கம்:-இது, சென்னை, திருவல் லிக்கேணி ஜ்யோதிர்பூஷணம் ஸ்ரீ T. S. விசுவநாதசிரௌதிகள், B.A. அவர்கள் பார்வையில் அவர்கள் சிஷ்யர் யாழ்ப்பாணம் மட்டுவில் ஸ்ரீ சி. சுப்பிரமணிய ஐயரவர்களால் கணிக்கப்பட்டது. திதி வார நக்ஷத்திர யோக கரணங்களையும் அவற்றோடியைபுடைய பிற வற்றையும் தெளிய விளக்குவது. வழக்கப்படி யாவருக்கும் பயன் படுமாறு பதிக்கப்பெற்றது. இதன் விலை (தபாற்செலவுடன்) அணா 5. வேண்டுவோர், 'ஸ்ரீ. சுப்பிரமணிய ஐயரவர்கள், தில்லை வளாகம், மட்டுவில், சாவகச்சேரி, யாழ்ப்பாணம், இலங்கை' என்ற விலாசத்திற் பெறலாம்.

---

௩௫

# கம்பராமாயணசாரம்

[தமிழ்ப்பெருங்கவி, முதுபெரும்புலவர்,
ஸ்ரீ. ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]

உ௧0-ஆம் பக்கத் தொடர்ச்சி.

## களியாட்டுப்படலம்

கள்ளுண்டு களித்தலோடு (நாட்டியப்பெண்கள் நடனம்) ஆடுதலைக் கூறுவது. களி - கள்ளுண்டு களித்தல். ஆட்டு - கூத்து.

### இராவணன் வெற்றிகொண்டாடல்

[ பிரமாத்திரத்தினால் பகைவர் அழிந்தாரென்ற பெருமகிழ்ச்சியினால், இராவணன், மாதர்கள் கள்ளுண்டு களித்து ஆடும்படிசெய்வானானன். அவனாணைப்படி தேவமாதரும் வித்தியாதரமகளிரும் அசுரமடந்தையரும் நாககன்னியரும் இயக்கமின்னாரும் சித்தமடவாரும் கூட்டங்கூட்டமாக வந்தார்கள். மேனகை அரம்பை திலோத்தமை ஊர்வசி முதலிய தேவநடனமாதர், வாத்தியம் முழங்கப் பாதச்சிலம்பு ஒலிக்க நடனமாடிக் கொண்டுவந்தார்கள். அந்த மாதர்களின் புன்சிரிப்பின் ஒளியாகிய வெண்ணிலவும் அவர்களுடைய ஆபரணங்களின் ஒளியாகிய இளவெயிலும் மேனியின் ஒளியாகிய தீபசோபையும், அம்மாதர் அழகு அவரைக்கண்ட காளையர் அறிவைக் கலங்கியோடச்செய்தல்போல, இருளை மருண்டோடச்செய்தன.*

---

* முளைக்கொழுங் கதிரின் கற்றை முறுவல்வெண் ணிலவும் மூரி
ஒளிப்பிழம் பொழுகும் பூணின் உமிழிள வெயிலும் ஒண்பொன்
விளக்கையும் விளக்கும் மேனி மிளிர்கதிர்ப் பரப்பும் வீச
வளைத்தபே ரிருளும் கண்டோர் அறிவென மருளும் மாதோ.

(இப்படலம் 5-ஆம் பாட்டு.)

முளை - முளைத்தல் (உடைய); முதனிலைத்தொழிற்பெயர். கதிர் - கிரணம். கற்றை - தொகுதி - கூட்டம். முறுவல் - சிரிப்பு. மூரி - பெருமை - மிகுதி. பிழம்பு - திரட்சி. பூண் - ஆபரணம். உமிழ்தல் - வெளிப்படுத்தல். மருளல் - வெருளல் - வெருண்டோடுதல்.

சிறந்த கல்விப்பயிற்சியினால் குற்றமற்ற ஒழுக்கநெறியை அநுசரித்துப் பரிசுத்தரான பெரியோர் உபதேசமொழியொடு பழகி, அறிவுமுதிர்ந்து (இதனால் இது விளையுமெனப்) பின்வரும் பயனை முன் உணரும் தேர்ச்சியில்லாத பேதையர்பால், வஞ்சகக் குணமுடையோர் செய்த ஏமாற்றத்தின் பயன்போல (இராவணன் முதலியோர் அருந்திய) மதுவின்வேகம் விரைந்து வளர்ந்தது.*

மதுவுண்டு நடிக்கும் மாதர்வருணனை

கள்ளுண்டு களித்து நடிக்கும் மாதருக்குச் சிரிப்பு மிகுதியாக வளர்ந்தது; வேர்வை அரும்பியது; இதழ் துடித்தது; (சிரிப்பு மிகுதியால்) பற்கள் (மிக வெளிப்பட்டு) வெள்ளொளி வீசின; கண்களின் வெளுப்புச் சிவந்தது; வாயின் சிவப்பு வெளுத்தது; புருவங்கள் நெற்றிமீதேறி வளைந்தன.† கூந்தலும் ஆடையும் கட்டவிழ்ந்து கலைந்து சரிந்து காலில் விழும்படி (வேகமாக ஆடி) அந்த மாதர்கள் மயங்கிச் சோர்வுற்றார்கள். கீழோரால்நேருங் குறைவை மேலோர் மாற்றுதல்போலக் கீழான அரையிலுள்ள ஆடைகாவாதமானத்தை மேலான தலையிலுள்ள கூந்தல் (பாதம்வரையும் தொங்கி உடம்பைச்சூழ்ந்து மறைத்துக்) காத்தது.

---

* நற்பெருங் கல்விச் செல்வம் நவையறும் நெறியை நண்ணி
முற்பயன் உணர்ந்த தூயோர் மொழியொடும் பழகி முற்றிப்
பிற்பயன் உணர்தல் தேற்றாப் பேதைபால் வஞ்சன் செய்த
கற்பனை யென்ன ஓடிக் கலந்தது கள்ளின் வேகம். (6-ஆம் பாட்டு)

நவை - குற்றம். தேற்றா - தெளியாத.

† இவை, கள்ளுண்டார் மெய்ப்பாடுகள் (- உள்ளத்தின்நிகழ்ச்சிகளை வெளிக்காட்டும் உடல்நிகழ்ச்சிகள்). செவ்வாய் வெளுத்தலும் வெண்கண் சிவத்தலும் கள்ளுண்டார் காமம்நுகர்ந்தார் நீராடினார் ஆகிய முத்திறத்தாரும் அடையும் பொதுத்தன்மைகள். இத்தன்மைகள், இங்கே கள்ளுண்டதனால் நிகழ்ந்தனவென்றதுபோல, கலவியினால் உண்டாமென்று,

'வாயிற் சிவப்பை விழிவாங்க மலர்கண் வெளுப்பை வாய்வாங்கத்
தோயக் கலவி அமுதளிப்பீர் துங்கக் கபாடம் திறமினோ'

என்று கலிங்கத்துப்பரணித் தாழிசையிற் கூறியிருப்பது காண்க. நீராடினார் கண்சிவந்து வாய்விளர்க்குமென்பது, 'செய்யவாய் விளர்ப்பக் கண்சிவப்புற ...........மங்கையர்தோய்தலால்' (பாலகாண்டம். நீர்விளையாட்டுப்படலம், 19.) என்பதனால் விளங்கும்.

மதுமயக்கத்தால் சிலர் அழுவார், சிலர் சிரிப்பார், சிலர் பாடுவார், சிலர் ஆடுவார், சிலர் பக்கத்தில்நின்றவரைத் தொழுவார், சிலர் தூங்கிவிழுவார், சிலர் துள்ளிவிழுவார், சிலர் உமிழ்நீர் ஒழுக விடுவார், சிலர் ஒருவர்மேலொருவர் சாய்ந்துவிழுவார், சிலர் கண்ணை மூடிக்கொண்டு சோம்பல் முறிப்பார்.*

### வானரர் ஆரவாரம் இராவணன்காதில் விழுதல்

மாதர் களியாட்டைக்கண்டு களித்திருந்த இராவணன் காதுகளிலே சஞ்சீவியால் உயிர்பெற்ற வானரர் ஆரவாரம் நுழைந்தது.]

152 ஆடலுங் களிப்பின்[1] வந்த வமலையு மமுதி னான்ற[2]
பாடலு முழவின்[3] தெய்வப் பாணியும் பவள வாயார்
ஊடலும்[4] கடைக்க ணோக்கு[5] மழலை[6]வெவ் வுரையு மெல்லாம்
வாடன்மென் மலரே[7] யொத்த வார்ப்பொலி வருதலோடும்.

கொண்டுகூட்டு: பவளவாயார் ஆடலும், களிப்பின்வந்த அமலையும், அமுதின் ஆன்ற பாடலும், முழவின் தெய்வப்பாணியும், ஊடலும், கடைக்கண் நோக்கும், மழலைவெவ்வுரையும் எல்லாம், ஆர்ப்பு ஒலி வருதலோடும் வாடல் மென்மலரே ஒத்த.

பொருள்: (மாதர்களின்) நர்த்தனமும் (அதனைக்கண்டோர்) களிப்பினால் (புகழ்ந்துபாராட்டுதலால்) உண்டாகிய ஆரவாரமும் (அம்மாதர்கள் பாடுகின்ற) அமுதம்போலச் சிறந்த பாடலும் (அப்பாடலுக்கிசைவாகமுழக்கப்பெற்ற) முரசின் திவ்வியமான ஒலியும்

---

* அழுகுவார் நகுவார் பாடி ஆடுவார் அயல்நின் றாரைத்
தொழுகுவார் துயில்வார் துள்ளித் தூங்குவார் துவர்வா யின்றேன்
ஒழுகுவார் ஒல்கி ஒல்கி ஒருவர்மே லொருவர் புக்கு
முழுகுவார் குருதி வாட்கண் முகிழ்த்திட மூரி போவார்.
(13-ஆம் பாட்டு.)

நகுவார் - சிரிப்பார். துயில்வார் - தூங்குவார். தூங்குவார் - சோர்(ந்து விழு)வார். துவர் - பவளம்; சிவப்பு. தேன் - (இங்கே) தேன்போலும் உமிழ்நீர். ஒல்குதல் - தளர்தல். புக்கு - புகுந்து. குருதி - இரத்தம் (போலும் செந்நிறம்). முகிழ்த்திட - மூட. மூரிபோதல் - சோம்பல்முறித்தல்.

(அவர்களை மோகித்துநோக்கும் காமுகர்க்கு இசையோமெனக் குறிப்பிக்கும்) ஊடலும் (அதனால் அக்காமுகர்வருந்தல்கண்டு அம்மாதர் இரங்கித் தம் இசைவைக்குறிப்பிக்கும்) கடைக்கண் பார்வையும் (அவர்களுடைய) விருப்பம்விளைக்கும் மென்மொழி யும் ஆகிய இனிமையாயிருந்த) எல்லாம், (வானரர் ஆரவாரிக்கும்) ஓசை (காதுக்கு) எட்டியவுடனே, (இனிமை நீங்கினவாகி, வாடுமுன் வனப்பாயிருந்த) மலர்கள் வாடி (வனப்புநீங்கி)யவற்றை ஒத்தன.

வருதல் - உண்டாகுதல். வந்த - உண்டாகிய. அமலை - ஆரவாரம். ஆன்ற - மாட்சிமைப்பட்ட - சிறந்த. முழவு - முரசு. தெய்வப்பாணி - திவ்வியமான ஒலி. பவளவாயார் - பவளம்போன்ற வாயுடையார் - மாதர். மழலை - மென்மொழி. வெம்மை - விருப்பம். வெவ்(விய) உரை - விருப்ப மான மொழி. ஆர்ப்பு - ஆர்த்தல் - ஆரவாரித்தல்.

பாடபேதம்: [1] ஆடலின் களிப்பின், ஆடலுங்களியின். [2] அழகினுன்ற, அளவிலாத. [3] முழவும், அளவில். [4] ஊடலின். [5] நோக்கம். [6] முதல. [7] வாடினமலரே, ஆடல்செய்வேலே, ஆடுவல்லரவே.

இராவணன் மந்திராலோசனைமண்டபத்துக்குப் போதல்

[ வானரர் ஆரவாரித்த ஓசையை அடுத்து, இராமலக்குமணர் வில்நாணெறிந்த ஓசை கேட்கப்பட்டது. அப்போது, இராவண னுக்கு மாதர்கூட்டம், (விருப்புவிளைத்தலொழிந்து வெறுப்பு விளைப்பதாகி) வானரர்கூட்டம்போலக் காணப்பட்டது. அவன் மனம், மந்தரமலையினுற் கலக்குண்ட கடல்போல, மறுக்கமுற்றது. (வெற்றிகொண்டாடும் காலமாய் அவனுடைய முகப்பொலிவுக்குக் காரணமாயிருந்த) இராக்காலம், அவனுடைய பத்து முகமதிகளுக் கும் (அந்தமதிகளைப் பொலிவிழக்கச்செய்யும்) பகற்காலத்தை ஒத்தது. இச்சமயத்தில் தூதர்கள், வண்டுருவங்கொண்டு, அவன் அணிந்திருந்த மாலைமீதேறிக் காதருகே சென்று, (அனுமான் மருந்துமலைகொணர்ந்ததும் அதனால் பகைவர் உயிர்பெற்றெழுந்த தும் ஆகிய) நிகழ்ந்த எல்லாவற்றையும் ஊதி (—பிறர்கேட்காத படி மெல்லச் சொல்லி)ப்போனார்கள். அவன் திடுக்கிட்ட நெஞ் சினனாய்க் களியாட்டு நிகழ்ந்துகொண்டிருந்த மலர்ப்பந்தலைவிட்டு நீங்கி, மந்திராலோசனைமண்டபத்துக்குப் போனான். ]

களியாட்டுப்படலம் முற்றிற்று.

---

## மாயாசீதைப்படலம்

இந்திரசித்து மாயையால் நிருமித்த சீதையை அனுமான்கண் முன்னே வெட்டியதைக் கூறுவது.

### இராவணன், ஆலோசனைச்சபைக்குவந்தவர்களிடம் செத்த பகைவர் பிழைத்ததைக் கூறல்

[ இராவணனிருந்த மந்திராலோசனைமண்டபத்துக்கு இந்திரசித்து மகோதரன் முதலிய தலைவர்களும் மற்றும் ஆலோசனையில் கலந்துகொள்ளுதற்குரியவர்களும் வந்துசேர்ந்தார்கள். அவன், அவர்களுக்கு, இறந்த எதிரிகளெல்லாரும் திரும்ப உயிர்பெற்ற விவரத்தைக் கூறினன்.

### மாலியவான் கூறுதல்

அப்போது, வயதுமுதிர்ந்த மாலியவான், ('இப்போது புத்தி கூறினல், இராவணன் ஏற்றுக்கொள்வான்' என்று எண்ணிக்) கூறுகின்றன்:—'அந்தோ! போர்க்களத்திற் கிடந்த நம்மவர் உடம்புகளைக் கடலில் எறிந்திராதிருந்தால், அவர்களனைவரும் பிழைத்திருப்பார்களே! பிரமாத்திரம் பழுதுபட்டதனல், இனி, இங்குள்ளாரெல்லாரையும் எதிரிகள் கொன்றுவிடுதற்குத் தடையான இடையூறு யாதுமில்லை. இலங்கையிலிருந்து மேருவைத்தாண்டி இமைக்குமுன் மருத்துமலையைக் கொணர்ந்த அனுமான், இலங்கையை அஃதுள்ள கடலினின்றும் பேர்த்தெடுத்துப் பூமி பிளந்திடும்படி எறிதல், எளிதே. அவ்வாறு செய்தால், இறவாது பிழைத்திருக்கக்கூடிய இராக்கதர் யாரிருக்கின்றார்கள்? ஆகவே, போர்புரிதல், எவ்வாறு இயலும்? அந்த அனுமான், மேருகிரியைக் கொண்டுவந்து இலங்கைமேல் வீசுவானனல், யாரால் விலக்கமுடியும். அவன் தருமமுறை தவறும்படி (ஒன்றுஞ் செய்ய நினையான். ஆயினும், அவன் அதர்மமாக) யாதாயினுமொன்றைச் செய்ய நினைவானனல், (அது உலகமுழுவதையும் அழிப்பதாகவிருந்தாலும் அதனை,) அவன் நினைத்தபடியே செய்துமுடிக்கவல்லவன்.

சர்வப்பிரபஞ்சத்துக்கும் தலைவர்கள் பிரம விட்டுணு ருத்திரர்கள் மூவரென்று கூறுபவர், ஆலோசனையற்றவர்கள். அகிலலோக முதல்வர்கள், மும்மூர்த்திகளோடு அனுமானும் சேர்ந்து நால்வராவர். ]

153 இறந்தன ரிறந்து தீர வினியொரு பிறவி வந்து
பிறந்தன மாகினுள்ளோ முய்ந்தனம் பிழைக்கும் பெற்றி
மறந்தன[1] மெனினு மின்னஞ் சனகியை மரபினீந்தவ்[2]
அறந்தரு சிந்தை யோரை யடைக்கலம் புகுது மைய.

கொண்டுகூட்டு: ஐய, இறந்தவர் இறந்துதீர, இனி (வேறு) ஒரு பிறவி(யில்)வந்து பிறந்தனமாகின், உள்ளோம். உய்ந்தனம் (ஆகப்) பிழைக்கும்பெற்றி மறந்தன மெனினும், இன்னம் சீதையை மரபின் ஈந்து அ(ந்த) அறம் தரு சிந்தையோரை அடைக்கலம் புகுதும்.

பொருள்: ஐயா, (வானரர் மாண்டாரை வாழ்விக்க, வானர அனுமான் இருத்தல்போல, இராக்கதர் இறந்தாரை எழுப்ப, இராக்கத அனுமான் இல்லையாதலால், (இராக்கதரான நம்மில்,) இறந்தவர் (பிழையாராய்) இறந்தேயொழிய, (இறவாது எஞ்சியுள்ள) நாம் (எதிரிகளால் கொல்லப்பட்டு இல்லோமாதல் திண்ணம். நாம் உள்ளோமாகவேண்டுமானால், இறந்து, இந்தப் பிறவிநீங்கி) இனி வேறொரு பிறவியிலே வந்து பிறந்தோமானால், உள்ளோமாவோம். உயிர்தப்பிப்பிழைத்தற்குச் செய்யவேண்டிய (சீதையைவிட்டு விடுதலாகிய) முறையை (இதற்குமுன்புசெய்யாமல்) அசட்டை செய்திட்டோமானாலும், இனி(யேனும் அந்த)ச் சீதையைத் தரும சிந்தையுள்ளோ(ரான இராமலக்குமண)ரிடம் முறையாகக் கொடுத்து அவர்களைச் சரண்புகுவோம் (ஆக).

உய்ந்தனம் - உயிர்தப்பினோம் (ஆகி). பெற்றி - காரியமுறை (தமிழ் அகராதி). மறத்தல் - அசட்டைசெய்தல். (தமிழகராதி). மரபு - முறை அடைக்கலம் புகுதும் - சரண்புகுவோம்.

'இறந்தனர் இறந்துதீர' என்பதற்கு 'இறந்துபோனவர் இறந்தவராகவே யொழியட்டும்' என்றும், 'இனி ஒரு பிறவி வந்து பிறந்தனமாகின்

உள்ளோம்' என்பதற்கு 'அரக்கத்தன்மை நீங்கிச் சாதுத்தன்மையை மேற் கொண்டால் உள்ளவராவோம்' என்றும், 'உய்ந்தனம் பிழைக்கும் பெற்றி மறந்தனம்' என்பதற்கு 'உயிர்தப்பினேமாகிப் பிழைக்குந் தன்மையை (இது வரையில்) மறந்துவிட்டோம்' என்றும் பொருள்கூறுதல் உண்டு.

பாடபேதம்: [1] மறந்திலம். [2] ஈந்தே.

[ ஓர் அம்பினுல், மண்ணில் வாழ்வானுயிருந்த வாலியை விண்ணில் வாழ்வானுக்கிக் கடலை வென்று, கும்பகருணனைக் கொன்றவனை (ஊதினுல் ஒழிந்துபோம்) நீர்க்குமிழிபோல் (அவனுல் வெகுலகுவாக) அழியும் இராக்கதரோ வெல்வார்!* கடலைக்குடித்து மண்ணுேடு விண்ணையும் பறிக்கவல்லவராயிருந்த இராக்கதரெல்லாரும், இறந்துவிட்டார்கள். இலங்காபுரியிலே உன்மகன் இந்திரசித்தும் நீயும் அல்லாமல் உயிர்தப்பிப் பிழைத்தவர்கள் ஒருவரும் இல்லை† என்று கூறினுன் (மாலியவான்).

## மாலியவானை இராவணன் கோபித்தல்

மாலியவான்கூறியதைக்கேட்ட இராவணன், மேகம் மின்னினுற்போல(க் கறுத்தமுகங்களிலுள்ள வெண்) பற்கள் வெளித்தோன்றச் சிரித்து, அந்த மேகம் இடித்தாற்போல அதட்டி, 'நீ கூறியது நன்று! நன்று!! என்று கோபித்துக் கூறினுன்.

---

* வாலியை வாளி ஒன்றுல் வானிடை வைத்து, வாரி
வேலையை வென்று, கும்ப கருணனை வீட்டி ஞனை
ஆலியின் மொக்குள் அன்ன அரக்கரோ அமரின் வெல்வார்.

வாளி - அம்பு. வான் - தேவலோகம். வாரி - நீர். வேலை - கடல். வீட்டுதல் - கொல்லுதல். ஆலி - மழை. மொக்குள் - குமிழி. ஆலியின் மொக்குள் - மழையால் உண்டாகும் நீர்க்குமிழி.

† மறிகடல் குடித்து வானை மண்ணுெடும் பறிக்க வல்ல
எறிபடை அரக்க ரெல்லாம் இறந்தனர் இலங்கை யூரில்
சிறுவனும் நீயும் அல்லால் யார் உளர் ஒருவர் தீர்ந்தார்?

படை - ஆயுதம். தீர்ந்தார் - (இறவாது) ஒழிந்தார் - உயிர்தப்பிப் பிழைத்தவர்கள்,

## இராவணன் வீரவாதம்

இராவணன், கோபத்தால் கண்கள் நெருப்புப் போலச் சிவக்க நோக்கி 'இராக்கதரெல்லாரும் இறந்தாரென்றாலும், ஆயுதங்களெல்லாம் அற்றனவானாலும், நான் உயிர்வாழ்தல் ஒழிந்தாலொழியச் சீதையைவிடேன். அந்தக் கிளி(போன்ற அழகும் பேச்சும் உடைய சீதை)யை விட்டிடவோ பிடித்தேன்? எனக்கு மைந்தனால் என்ன பயன்? மற்றவரால் என்ன பயன்? ஒன்றுமில்லை. நீங்கள், சாதலை அஞ்சி வாழ்தலை விரும்பினீர்கள்: உயிர்பிழைத்துப் போங்கள். நாளைத்தினம், நான் ஒருவனே, ஊழித்தீப்போல ஓங்கிக் குரங்குகளோடு மனிதர்களைக் கொன்றிடுவேன்'* என்று கூறினான். அப்போது, இந்திரசித்து, எழுந்து, பின்வருமாறு பேசுவானானான்.

### இந்திரசித்து, 'நிகும்பலையில் யாகம்முடித்தால், வருந்துதலொழிந்திடு'மெனல்

'ஐயனே! எதிரிகளொருவரையும்விடாமல் எல்லாரையும் கொல்லும்படியே, நான் பிரமாத்திரத்தைப் பிரயோகித்தேன். அது, மற்றெல்லாரையும் தாக்கி இராமனொருவனைமட்டும் தீண்டாமல் மீண்டது. அதனால், அவன், விபீடணன் மெய்யாக விளம்பியவாறு, மானுடனல்லன்; வானவனல்லன்; மாமுனியுமல்லன்; "யான் எனது" என்ற அகப்பற்றும் புறப்பற்றும் அற்ற யோகிகளின் தியானப்பொருளான முழுமுதற்கடவுளென்பது தெளிவானது. இது (-இவ்வுண்மை - உன்கருத்துக்குப்) புறம்பானது. அதுநிற்க. (அதைப்பற்றி மேற்கொண்டுபேசுதலை நிறுத்திக்கொள்கின்றேன்.) நான் நிகும்பலையென்னுமிடத்தை விரைந்தடைந்து வேள்வியைமுடித்தால், துன்பம் ஒழிந்திடும்' என்று இந்திரசித்து சொன்னான்.

---

*'மைந்தன் என்! மற்றையோர் என்! அஞ்சினீர் வாழ்க்கை வேட்டீர்,
உய்ந்துநீர் போமின், நாளை ஊழிவெந் தீயின் ஓங்கிச்
சிந்தினன் மனிசரோடு குரங்கினைத் தீர்ப்பன்' என்றான்.

என் - என்னபயன். வேட்டீர் - விரும்பினீர். உய்ந்து - உயிர்பிழைத்து. தீயின் - தீப்போல், சிந்தினன் தீர்ப்பன் - அழித்தொழிப்பேன்.

இராவணன், 'அது நல்லதே. அவ்வாறே செய்வாயாக' என, இந்திரசித்து 'உன்தம்பி விபீடணன் உளவுசொல்ல, எதிரிகள் வந்து வேள்வி நிறைவேருதபடி போர்புரிவரே?' என, இராவணன், 'அவர் வராதபடி என்ன உபாயம் செய்யலாம்?' என, இந்திரசித்து 'மாயையால் சீதையுருவத்தைச் சிருட்டிசெய்து அனுமான் முன்னே வெட்டிச் சேனையோடு அயோத்தியை அழிக்கச்செல்கின்றேன்' என்று செப்பிச்சென்றபின், எதிரிகள் செய்வதின்னதென்று தெரியாது திகைத்து வருந்திச் "சீதை மாண்டாள். இனி இங்கிருப்பதனல் பயனில்லை. அங்கே தாய்மாரும் தம்பிமாரும் அயோத்திநகரும் அழியும்படிநேருமென்று அச்சங்கொண்டு இராமலக்குமணர் சேனையோடு போய்விடுவார்கள். போகவில்லையானாலும், அனுமானை அயோத்திக்கு அனுப்பி நிகழ்ந்ததையறிந்தாலன்றித் துன்பத்தைத்தாங்கமாட்டாமற் சும்மா (செயலற்றவராய்) இருப்பார்கள். அப்படியிருக்கும்போது, வேள்வியை விரைந்துமுடித்துப் படையோடுசென்று அவர்களைக் கொன்று வெற்றியை உனக்குத் தருவேன்' என்முன். இந்திரசித்துக் கூறியவாறுசெய்யும்படி, இராவணன், அநுமதியளித்தான். இந்திரசித்து, மாயச்சீதையை வகுத்தற்குச் சென்முன்.

### குரங்குகள் கொள்ளிகளை இலங்கையெங்கும் எறிதல்

இராவணனுடைய ஆலோசனைச்சபையில் இந்தநிகழ்ச்சிகள் நிகழ்ந்தபோது, போர்க்களத்தில், சுக்கிரீவன், இராமனைவணங்கி 'இலங்கைநகர் அழியும்படி சுட்டெரிப்போம்' என, இராமன் 'அது நல்லது' எனச் சுக்கிரீவன், இலங்கைநகரத்தின் கோபுரத்துச்சிமேல் தாவினன். எழுபதுவெள்ளம் சேனையிலுள்ள ஒவ்வொரு குரங்கும் ஒவ்வொரு கொள்ளிக்கட்டையைக் கையிலெடுத்துக் கொண்டது. அந்தக் குரங்குக்கூட்டம், வெண்ணிறமேகம் மின்னல்களை வீசினற்போலக் கொள்ளிக்கட்டைகளை வீசிக்கொண்டு, இலங்கைமதில்வாயிலை அடைந்தது. இலங்கைக்கு நாசகாலம்வரப் போகிறதென உணர்த்தும் உற்பாதமாக நட்சத்திரங்கள் உதிர்தல்

போல, அந்தக் குரங்குகள், கொள்ளிக்கட்டைகளை இலங்கையில் எங்கும் விழும்படி வீசின. இலங்கையில் குரங்குகள் எறிந்தகொள்ளிகள், கடலில் இராமன் ஏவிய அம்புகள்போன்றன. இலங்கைநகர் எரிந்தது, கடல் எரிந்ததை ஒத்தது.

### அனுமான் திரும்பிவருதல்

மருந்துமலையை இருந்த இடத்துக்குத் திரும்பிக்கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு, அனுமான், இலங்கையின் மேற்குவாயிலுக்கு வந்துசேர்ந்தான். அப்போது, அவன் எதிரே, இந்திரசித்து, ஒருகையினால் மாயச்சீதையின் கூந்தலைப்பிடித்திழுத்துக்கொண்டும் மற்றொருகையில் வாளைப்பிடித்துக்கொண்டும் வந்து, அனுமானைநோக்கி 'இவள் காரணமாக, இலங்கைக்குவந்து, போர்புரிந்தீர்கள். இவளை என்தந்தை இகழ்ந்து, தள்ளிவிட்டான். இவளைக் கொன்றுவிடுகிறேன்' என்று கோபத்தோடு கூறினான். அனுமான் 'நான்பார்த்த சீதையே இவள்; நம்வாழ்வு அழிந்தது' என்று மனம்நொந்து, அந்தத்துன்பத்தைத் தொலைக்க உபாயம் ஒன்றும் தோன்றாதவனாய், வாய்உலர்ந்து, உயிர் இருக்கிறதோ போய்விட்டதோவென்று சந்தேகிக்கும்படியானான். பின்பு ஒருவாறு தெளிந்து, 'இப்போது வேறு செய்யத்தக்கதில்லை. நீதிகூறுதலே தக்கது' என்று கருதி 'உயர்ந்தகுலத்தில் உதித்த உத்தமகுணத்தோனே, மாதரை வருந்தச்செய்தல் வசைக்கிடமானது' என்றுகூறி, மேலும் கூறுகின்றான்:— ]

154 மண்தலை கின்றது வான[1] நடுங்கிக்
கண்தலை கின்றது காணுதி கண்ணால்
என்தலை கின்ற திரங்க[2] லுறந்தாய்
பெண்கொலை செய்தல்[3] பெரும்பழி யன்றே.

கொண்டுகூட்டு: இரங்கல் துறந்தாய்! மண்குலைகின்றது! வானம் நடுங்கிக் கண்குலைகின்றது! கண்ணால் காணுதி. (என்) எண் (ணம்) குலைகின்றது! பெண் கொலைசெய்தல் பெரும்பழியன்றோ!

பொருள்: இரக்கத்தைக் கைவிட்டவனே! (நீ இந்தத் தீய செயல் செய்யக்கருதுவதைக்கண்டு) மண்ணிலுள்ளோர் நடுங்குகின்ருர்கள், விண்ணிலுள்ளோர் நடுங்கி (அவர்களுடைய) விழிகள் (இமையாதவை, உன் விபரீதச்செயலைக் கண்டு சகிக்காமல் கலங்கி இமைத்து,) நிலைகுலையப்பெறுகின்ருர்கள் (நீ இவற்றை உன்) கண்ணுற் காண்பாயாக. என் மனம் நடுங்குகின்றது! பெண்கொலை செய்கை பெரும்பழியன்ருே!

மண், மண்ணிலுள்ள மனிதருக்கும், விண், விண்ணிலுள்ள தேவருக்கும் ஆகுபெயர். காணுதி - காண்பாய்; காண்கின்ருய். எண் - மனம்.

பாடபேதம்: [1] வானும். [2] நெஞ்சிலிரங்க. [3] செய்கை.

[ 'நீ, என்னிடம் இரக்கங்கொண்டு, இச்செயலைச் செய்யாது சென்ருயானுல், உலகமெல்லாம் உன்வசமாம். புல்லிய தொழிலைப் புரிவது புகழுக்கு அழிவாம்' என்று அனுமான் கூறினுன்.

## இந்திரசித்தின் மறுமொழி

இந்திரசித்து, 'என் தந்தையும் இலங்காபுரியும் அழிவதினின்று தடுத்தற்குக் காரணமான இச்செயலை (சீதை வதையை)க் காட்டிலும் புகழ்தரக்கூடிய செயலுண்டோ? நன்ருக ஆராய்ந்து கூறுவாயாக' என்று இந்திரசித்துக் கூறிச் சிரித்துப் பின்னும் கூறுவான்:—

'நீங்கள் வந்தகாரியம் (சீதையை மீட்டலென்பது) கூடாமற் போய்விட்டது. கூடுமானுல், அயோத்தியையடைந்து, காத்திடுங்கள். அந்த நகரை என் அம்புகள் வீசும் அனலுக்கு இரையாக்கிக் கரியாக்கிவிட்டுத் திரும்புவேன். அந்தக் கனலில் இராமனுடைய தம்பிமாரும் தாய்மாரும் அவிந்தவர்களே யாவார்கள். இப்பொழுதே இந்தப் புட்பகவிமானத்திலே விரைந்து செல்கின்றேன். வெப்பம் மிக்க எண்ணிறந்த என் அம்புகள் பாய்ந்தால், அங்குள்ளார் ஆரும் தப்பமாட்டார்' என்று மறுமொழி கூறினுன். ]

155 ஆளுடை யாயரு ளாயரு ளாயென்
றேழை வழங்குறு சொல்லி னிரங்கான்[1]
வாளி னெறிந்தனன் மாக்கடல் போலும்
நீளுறு சேனையி னோடு நிமிர்ந்தான்.

கொண்டுகூட்டு: 'ஆளுடையாய்! அருளாய்!! அருளாய்!!!' என்று ஏழை (மாயாசீதை) வழங்குறு சொல்லின் இரங்கான், வாளின் (அவளை) எறிந்தனன்; மாகடல்போலும் நீளுறுசேனையினோடு நிமிர்ந்தான்.

பொருள்: '(என்னை) அடிமையாகவுடையவனே! இரங்கு!! இரங்கு!!!' (உயிர்ப்பிச்சைகொடு) என்று (மாயா) சீதை (ஏங்கிக் கதறி இரந்து) கூறும் சொற்களினால் (சிறிதும்) இரக்கங்கொள்ளாதவனாய், (இந்திரசித்து, அவளை) வாளால் வெட்டினான். (வெட்டினவன்,) பெரிய கடல்போன்ற பெருஞ்சேனையோடு (புட்பகவிமானத்திலே) உயரப்போனான்.

ஆளுடையாய் - அடிமையாக வுடையவனே. அருளாய் - அருள்வாய் - இரங்குவாய். ஏழை - பெண். வழங்குதல் - சொல்லுதல். சொல்லின் - சொற்களால். எறிதல் - வெட்டுதல். நீளுறு - (எண்) மிகுந்த. நிமிர்தல் - உயர்தல் - மேலெழுதல்.

பாடபேதம்: [1] ஏழைய வன்புறு சொல்லி யிரங்க, ஏழை வணங்குறு சொல்லி னிரங்க.

## இந்திரசித்து அயோத்திக்குச் செல்வதாகப் போக்குக்காட்டி நிகும்பலைக்குச் செல்லுதல்

[ (புட்பகவிமானத்திலே சேனையோடு உயர எழுந்த) இந்திரசித்து, தென்றிசைநின்று வடதிசைநோக்கிச் சென்றான். அனுமான் சிறிதும் உணர்ச்சியில்லாதவனாகி, உயிரொடுங்கிக் கீழே விழுந்தான்.

வடக்குநோக்கிச்சென்ற இந்திரசித்து, மாறித் திரும்பி நிகும்பலைக்குச் சென்றான்.

## அனுமான் புலம்பல்

அனுமான், அறிவுசோர்ந்து, மனமொடுங்கி, வாய் வறண்டு, தன் இயற்கைப் பெருவலி நீங்கினவனாய் 'ஆ! என் அம்மையே!

அன்னம்போன்றவளே! பெண்கள்குலபூடணமே! தெய்வமென்பது ஒரு சிறிதும் இல்லாததாய்விட்டதோ! கொடியோன் உன்னை வாள்கொண்டு வெட்டித் துண்டாக்கக் கண்டும் (இந்தக் கோரக் காட்சியைக் காணும்படி முன்செய்த) தீவினையுடைய என் நெஞ்சும் உயிரும் பின்னமாக(ப் பிளக்கப்பட)வில்லையே!' என்று புலம்பினான்.* ]

156 முடிந்தது நந்தமெண்ண[1] மூவுல கிற்றுங் கங்குல்[2]
விடிந்ததென் றிருந்தேன் மீள வெந்துய ரிருளின் வெள்ளம்
படிந்தது வினையச் செய்கை பயந்தது[3] பாவி வாளால்
தடிந்தனன் றிருவை யந்தோ தவிர்ந்தது தரும மம்மா.

கொண்டுகூட்டு: அந்தோ! பாவி வாளால் திருவைத் தடிந்தனன்! நம்தம் எண்ணம் முடிந்தது! மூவுலகிற்கும் கங்குல்விடிந்த தென்றிருந்தேன். மீள வெம் துயர் இருளின்வெள்ளம் படிந்தது! வினையச்செய்கை பயந்தது! தருமம் தவிர்ந்தது அம்மா!

பொருள்: அந்தோ! பாவி (இந்திரசித்து) சீதாலட்சுமியை வாளால் வெட்டிவிட்டான்! (அவளைச் சிறைமீட்கக்கருதி மனப்பால்குடித்த) நம் எண்ணம் (இனி எக்காலத்தும் நிறைவேற முடியாததாய்) முடிந்தது! மூன்றுலோகத்தார்க்கும் (இராக்கதரால் ஏற்பட்டிருந்த துன்பமான) இரவு விடிந்ததென்றிருந்தேன். (விடிந்த இரவு) மீள(வந்து) வெய்ய துன்ப இருட்பெருக்குப்பாவியது! (பகைவர்களின்) வஞ்சகச்செயல் பலித்தது! தருமம் (உலகத்தைவிட்டு) நீங்கிவிட்டது!

---

* அன்னமே என்னும்; பெண்ணின் அருங்குலக் கலமே! என்னும்;
என் அ(ம்)மே! என்னும்; தெய்வம் இல்லையே யாதும் என்னும்;
சின்னமே செய்யக் கண்டும் தீவினை நெஞ்சம் ஆவி
பின்னமே ஆய தில்லை! என்னும்பே ராற்றல் பேர்ந்தான்.

கலம் - ஆபரணம். அம்மே - அம்மையே. யாதும் - எதுவும் - ஒன்றும் - சிறிதும். சின்னம் - துண்டு. பின்னம் - சிதைவு - பிளவு. பேராற்றல் - பெருவலி.

கங்குல் - இரவு. மீள - திரும்ப. வெந்துயர் - கொடியதுன்பம். படிதல் - பரவுதல் (தமிழகராதி). வினையம் - வஞ்சகம். பயந்தது - பலித்தது. (தமிழகராதி) தடிதல் - வெட்டுதல். தவிர்தல் - நீங்குதல். அந்தோ அம்மா, இரக்கக்குறிப்புச்சொற்கள்.

'முடிந்தது நம்தம் எண்ணம்' என்ற வாக்கியம், அனுமானுடைய நம்பிக்கையற்ற இதய ஏக்க வெளிப்பாட்டின் தொடக்கமாகவும், 'தவிர்ந்தது தருமம் அம்மா' என்பது முடிவாகவும் உள்ளன.

'நம்தம் எண்ணம் முடியவில்லை' என்றகருத்து, 'முடியவில்லை நம்தம் எண்ணம்' என மாறிக்கூறினுல் வலியுறும். அவ்வாறே, 'தருமம் தவிர்ந்தது' என்பது, 'தவிர்ந்தது தருமம்' என்றதனுல் வலியுற்றது. 'நம்தம் எண்ணம் முடியவில்லை' என்பதை வலியுறுத்தும் 'முடியவில்லை நம்தம் எண்ணம்' என்பதினும் மிகஅதிக வலியுடையதாக 'முடிந்தது நம்தம் எண்ணம்' எனக் கூறினுனென்ருர்.

சொல்வகையால் உடன்பாட்டுப்பொருளையும் கருத்துவகையால் எதிர்மறைப்பொருளையும் உணர்த்தும் 'முடிந்தது நம்தம் எண்ணம்' என்பது, எதிர்மறைப்பொருளைக் குறிப்பால் உணர்த்துவதாகிய 'எதிர்மறை இலக்கணைக்கு ஓர் உதாரணமாம்.

'கங்குல் விடிந்ததென்றிருந்தேன்' என்றது, 'துன்ப இரவு நீங்கியதாகக்காட்டிய வெளிச்சம் இன்பப்பகலுக்கு முன்வரும் காலைவெளிச்சமென் றெண்ணியிருந்தேன். நான் எண்ணியதற்கு மாருக, அந்தவெளிச்சம், துன்பஇரவுக்கு முன்வரும் மாலைவெளிச்சமாக ஆய்விட்டதே; விடிந்தபின் பகல்வராமல், இரவே வந்ததே' யென்று அனுமான் வருந்தினு னென்றவாறு.

பாடபேதம்: [1] எண்ணும். [2] மூவுலகிற்குமூடி, மூவுலகிற்கும்மூடம். [3] வினையச்செய்கை பரந்தது.

['இந்திரசித்து சீதாதேவியை என்கண்ணெதிரே கொல்ல(க் கண்ட துன்பத்தால் வலிகெட்டு)ச் சிறகற்ற பறவைபோல யாதொன்றும் செய்யமாட்டாதேனுயிருந்தேன். தேவியே! முன் இராமன் சொல்லியதை உன்னிடம்சொல்லும் தூதனுக இங்கே வந்து(நீசொல்லியதை அவனிடம் சொல்லத் திரும்பிப்) போனேன்.

இப்போது நான் இங்கே அவனோடு வந்தது, அவன் உன்னை மீட்டலைக் காணுதற்கன்று, பகைவன் உன்னை வீட்டலை (-கொல்லுதலை)க் காணுதற்கேயென்று கூறுமாறு கொடும்பழி சூட்டிக்கொண்டேன். தேவியைத் தேடித்திரிந்து வருந்திய சீராமனை, 'என்கண்களால் அவளைக்கண்டே'னென்று சொல்லித் தேற்றிய நானே, 'அவள் அரக்கன்வாளால் வெட்டுண்டா'ளென்று சொல்லும்படி ஆயினதே! என்சென்மம் இவ்வாறு (வியர்த்தம்) ஆயிற்றே! கடலைக் கடந்து, இலங்கையை எரியூட்டி, மேருவைத் தாண்டி, மருத்துமலையைக் கொணர்ந்து என்னையொப்பாரில்லையெனப் பாராட்டப்பெற்ற என்னுடைய அடிமைத்தனம், பெருங்கடலிற்கரைத்தகோட்டம் (-ஒருவகை வாசனைத்திரவியம்)போலப் பிரயோசனமற்றதாய்விட்டதே! இன்னும் என் அற்ப உயிரை அகற்றாதிருக்கின்றேன். பலபல இனிய பழங்களை உண்டு உயிர் ஓம்பியிருத்தற்கும் வன்மையுடையேன்போலும்!' என்று புலம்பினான்.

## அனுமான், இராமனுக்குச் சீதை வெட்டுண்டதைத் தெரிவித்தல்.

மேலே கூறியவாறு, தன்னை நொந்துகொண்ட அனுமான், (தன் உயிரை மாய்க்க எண்ணினபோது,) இந்திரசித்து அயோத்தி நோக்கிச் சென்றது நினைவுக்குவர (ச் சாகும் எண்ணத்தைத் தவிர்த்து,) அவனைத் தொடர்ந்துசெல்வேனென எண்ணினான். அப்படி எண்ணினவன், 'நான் சென்றுவிட்டால், நிகழ்ந்ததை இராமன் தெரியான். அதனை அவனுக்குத் தெரிவித்து, அவன் இறந்தால், யானும் இறப்பேன். அவன் இறக்கவில்லையானால், அவன் ஏவற்படி செய்வேன்' என்று எண்ணி, இராமன் இருந்த இடத்தை அடைந்து, உடலும் உள்ளமும் உயிரும் பதைக்கப் பொங்கி யெழுந்த துன்பம் மிகுந்து, (சண்டமாருதம்போலப்) பெருமூச்செறிந்து, அருவிபோலக் கண்ணீர்சொரிந்து, (அருவியோடு கூடிய வெள்ளி) மலை வீழ்ந்தாற்போல, இராமன்பாதங்களில் விழுந்தான். விழுந்தவனை, இராமன் குனிந்து எடுத்து நிறுத்தவும் (துன்பமேலீட்டால்) நிலைகொள்ளாது தள்ளாடி 'இந்திரசித்து சீதாதேவியை வாளால் வெட்டினான்' என்று கூறிவிட்டுத் திரும்பிக் கீழேவிழுந்து புரண்டு பொருமுவானானான்.

## இராமன் துயரம்

அதுகேட்ட இராமன், மெய்ந்நடுங்கினனில்லை; வேர்த்தானில்லை; மூச்சுவிட்டானில்லை; கண் இமைத்தானில்லை; கண்ணீர் துளித்தானில்லை; ஒருவார்த்தையும் உரைத்தானில்லை; உள்ளம் பொருமி வெடித்தானில்லை; தரையில் விழுந்தானில்லை.* அநுமான் சொன்னதைக் கேட்ட வானரவீரரெல்லாரும் துணுக்குற்றுச், சண்டமாருதத்தால் தாக்கப்பட்ட மரங்கள்போல நடுங்கி, இராமன் காலில் வீழ்ந்தார்கள்†. உடல்தம்பித்த இராமன், உள்ளமும் தம்பித்து, உணர்வற்றவனானன். காலில் விழுந்த நண்பர்முகத்தைப் பார்த்தானில்லை. தம்பி அவனுக்கு உணர்வைஉண்டாக்கக்கருதி வினவிய வினாக்களுக்கு விடையாக ஒரு வார்த்தையும் உரைத்தானில்லை. சீதைபால்வைத்த அபிமானமாகிய ஆயுதம் மார்பில் தைக்க, உயிரற்றவன்போன்று சாய்ந்து தரையில் விழுந்தான்.

## இலக்குமணன் துயரம்

இலக்குமணன், இராமன்நிலைமையைக்கண்டும், இருவருக்கும் நேர்ந்த மானக்குறைவை நினைந்தும், (இதுவரையும் வெற்றிமேல் வெற்றிபெற்றுக்) கைகூடிவந்த காரியம் அழிந்ததை நினைந்தும், இரங்கி, உடற்செயல்களும் உள்ளச்செயல்களும் ஓய்ந்து, சாய்ந்து தரையிலே விழுந்தான். (ஆயினும் அறிவுமுழுதும் அற்றானல்லன்.)

---

* துடித்திலன் உயிர்ப்பும் இல்லன்; இமைத்திலன்; துள்ளிக் கண்ணீர்
பொடித்திலன்; யாதும் ஒன்றும் புகன்றிலன்; பொருமி உள்ளம்
வெடித்திலன்; விம்மிப் பாரின் வீழ்ந்திலன்; வியர்த்தா னல்லன்
அடுத்துள துன்பம் யாவும் அறிந்திலர் அமர ரேயும். (58-ஆம் பாட்டு)
துள்ளி - துளி. பொடித்தல் - அரும்புதல் - உண்டாதல்.

இப்பாட்டின் ஈற்றடி மருத்துமலைப்படலம் 4-ஆம் பாட்டுக் கடையடியை ஞாபகமுறுத்துகிறது. அது வருமாறு:—

'அன்பெனப் தொன்றின் தன்மை அமரரும் அறிந்த தன்றால்'

† மிக்க உயர்வுடையாரை மிக்க தாழ்வுடையார் துக்கம் விசாரிக்கும் முறை.

### விபீடணன் ஆலோசனே

'இந்திரசித்து, "எதிரிகளேக் கொல்வது இயலாததாயிருக்கின்றது. எல்லாத் தீங்குகளும் இவள் காரணமாக ஏற்பட்டன." என்று, சீதையைக் கொன்றிருத்தல் கூடியது' என்று விபீடணன் ஐயங்கொண்டான்.

### விபீடணன் இராமனே மூர்ச்சைதெளிவித்தல்

('இந்தச் சந்தேகத்தைப் பின்பு தீர்த்துக்கொள்ளலாம். இப்போது செய்யக்கடவது இராமனே எழுப்புதல்' என்றெண்ணி) விபீடணன், இராமன்முகத்திலே குளிர்ந்தநீரைத் தெளித்துக் கால்களேயும் கைகளேயும் உடலேயும் வருட, அவன் மெல்லக் கண்களேத் திறந்துபார்த்தான்.

### இலக்குமணன், இராமன் தேறுமாறு கூறுதல்

அப்போது, இலக்குமணன், தான் ஊற்றுநீர்போலக் கண்ணீர் பெருக நிகழ்ந்ததை நினேந்து நெஞ்சமழிந்து தாங்கமுடியாத துன்பத்தால் சோர்ந்திருந்தாலும், 'மானத்தினுல் இராமன் உயிரழிகிருு'னென்றெண்ணி, அவன் தேறுமாறு கூறுகின்றுன்:—

'ஊழ்விதிப்படி கேடுநேருமானுல், சோர்ந்து துன்பக்கடலுள் முழுகிக்கிடத்தல், சிறியோர் செயல். அச்செயல், உனக்குப் பழி விளேப்பதாம். சீதை வதையால், நம் குலத்துக்கு இழுக்கு உண்டாயிருக்கிறதென்றுல், அதற்குப் பரிகாரம், (அந்த இழுக்கு உண்டாகாதவாறு காவாதுபோன) அறத்தோடு உலகத்தை அழித்து அந்த இழுக்கை ஒழிப்பதாம். அவ்வாறு செய்யாது, ஆலோசிக்கும் ஆற்றலற்றவர்போல, நீ, சோர்ந்து கழியக்கடவையோ? தவத்துக்கும் கருமத்துக்கும் கற்புக்கும் நிலேக்களமாயிருந்த உன் தேவி பெண்பாலாய்(ப் போர்செய்தற்குரிய ஆண்மையில்லாத அபலேயாய்*)த் துணேயில்லாதிருந்தவளேக் கொடியோன் கொன்றுனென்றுல், (அந்த அதிபாதகத்தைத் தடுக்கத் தவறிவிட்ட)

* அபலேகள் - பலமில்லாதவர்; பெண்கள்.

தருமத்தோடு நமக்கு உறவுண்டோ? போர்புரிதலிலே ஆற்ற லுடையவரும் அறநெறிநின்றவருமான நாம் அழியும்படி நேர்ந் தால் அரக்கரென்ன, அமரரென்ன, அந்தணரென்ன, குருக்கள் என்ன, முனிவரென்ன வேண்டாதவர் வேண்டியவரென்று வித்தி யாசம் பாராமல், திரிலோகவாசிகளையும் ஒருசேர எரிக்கு இரை யாக்காமல், வெறுமனே இருப்பானேன்! இலங்கையூரை இமைக்கு முன் தூளாக்கி, இராக்கதர்போனதிசையெல்லாம் போய்ச் சுட் டெரித்து, இந்த மண்ணுலகேயன்றி விண்ணுலகையும் எரித் தொழிக்கவல்ல நாம், கண்ணீர்பெருக்கிக்கொண்டு தலையைத் தொங்கப்போட்டுத் துன்பப்பட்டுக்கொண்டிருப்போமானால், அது சிறுமைக்கிடமாம்.' ]

157 அங்குமிவ் வறமே நோக்கி யாசிழந் தடவி யெய்தி
மங்கையை வஞ்சன் பற்ற வரம்பழி யாது வாழ்ந்தோம்
இங்குமித் துன்ப மெய்தி யிருத்துமே லெளிமை நோக்கிப்
பொங்குவன்[1] றளையிற் பூட்டி யாட்செயப் புகல்வ[2]ரன்றே.

கொண்டுகூட்டு: அங்கும், இ(ந்த) அறமேநோக்கி, அரசு இழந்து, அடவி எய்தி, மங்கையை வஞ்சன்பற்ற, வரம்பு அழியாது வாழ்ந்தோம். இங்கும், இத்துன்பம் எய்தி, இருத்துமேல், (எதிரிகள் நம்) எளிமைநோக் கிப் பொங்கு வன் தளையில் பூட்டி ஆட்செயப்புகல்வர் அன்றே.

பொருள்: 'அங்கும் (அயோத்தியினும்) இந்தத்தருமத்தை யே பார்த்து இராச்சியத்தையிழந்து, (துன்புற்றோம்,) காட்டை யடைந்து சீதாதேவியை வஞ்சனை இராவணன் கவர்ந்துகொள் ள(க் காட்டினும் தரும)வரம்பழியாது (துன்புற்று) வாழ்ந்தோம். இங்கும் (இலங்கையிலும், தேவியைக்கொன்ற தீயோரைச் சிதை யாமல், துன்புறுதல் தருமமென்று) துன்பமடைந்துகொண்டிருப் போமானால், (எதிரிகள் நமது) எளிமையைக் கண்டு (உற்சாகங் கொண்டு) மிகுந்த வன்மையுடைய (இரும்பு) விலங்குகளை (நம் கைகளிலும் கால்களிலும்) பூட்டி அடிமைவேலைசெய்யச் சொல் வார்கள்.'

அடவி - காடு. இருத்துமேல் - இருப்போமானல். பொங்குதல் - மிகுதல். தளை - விலங்கு. அன்று ஏ, அசைகள்.

'தளையில்' என்பதில் உள்ள 'இல்' என்ற எழன் உருபு, 'ஐ' என்ற இரண்டன் உருபுப்பொருள் தந்துநின்றது. 'யாதன் உருபிற் கூறிற் றாயினும், பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.'

பாடபேதம்: [1] வான், வெம். [2] புகல்வன்.

['நாம் (எதிரிகளைக் கொல்லாதுவிட்டுத் துன்பத்தால் இறப்போமானல், சீதாதேவியை நமக்கு எதிரே கொண்டுவந்து நம் கண்காண வாளால் கொன்றவரைக் கொல்லும் வலியில்லாத(தனல் ஏற்பட்ட) மானத்தால் மாண்டுபோனேம் என்று உலகத்தார் பழிப்பார்கள். ஆதலால், துயரத்தினல் உயிரைப்போக்குதல் உசிதமன்று' என்று கூறினன் (இலக்குமணன்).

### சுக்கிரீவனும் மற்றைய வானரரும் 'இலங்கையை அழிப்போ'மென எழுதல்

அதைக் கேட்டவுடனே, துயரத்தினல் அயர்ந்துகொண்டிருந்த சுக்கிரீவன், திடீரென்றெழுந்து, 'இராவணனையும் இராக்கதரெனப்பட்டாரெல்லாரையும் அவர்கள் மகளிரோடும் (மகளிரோடுமென்பானேன்) பால்குடிக்கும் பாலகரோடும் அடங்கக் கொன்றிடுவோம்' என்று இலங்கைமீது தாவத்தொடங்கினன். மற்றைய வானரவீரரெல்லாம், 'எம் அரசனுக்குமுன்னுகத் தாவி இராக்கதரைக் கொல்வோ'மென்று கூறிச் செல்லத்தொடங்கினர்கள். அப்போது, அனுமான், இந்திரசித்து அயோத்திமீதுசென்றதைச் சொன்னன்.

### அதுகேட்டு, இராமன் அதிகத் துயரம் அடைதல்

தாய்மாரும் தம்பிமாரும் தவம்புரியும் அயோத்திக்கு இந்திரசித்துப் போனனென்றசொல்லை இராமன்கேட்டபோது, தீப்பட்ட வேதனையுண்டானபோது அடிபட்டவேதனை உணரப்படாமை போல, தாய்மார் தம்பிமார் காரணமாக உண்டான துன்பத்தினல் சீதைகாரணமாகக்கொண்டிருந்த துன்பம் உணரப்படாததாயிற்று.

'என்தீவினைப்பயன், சீதைமரணத்தோடு தீராததாய், என் குலத்தை வேரோடு முடிப்பதாய் விளைந்துள்ளது. இத்தீவினை விளைவைத் தடுக்கும்வகையுண்டோ! மனோவேகத்தினும் அதிவேகமாகச்செல்லும் புட்பகவிமானத்திலேபோனவன் உத்தேசித்த காரியத்தை ஒருகணத்திலே முடித்துவிட்டு மீளுவான். அங்கே, நான்பிறந்தவமிசம் நாசமானது! இங்கே நான்கொண்ட மனைவி கொல்லப்பட்டாள்! இன்னும் என்ன தீமைகள் நேரப்போகின்றனவோ! தெரியேன்! (எல்லாத்துயரங்களுக்கும் முடிவான) சாவையும் காணேன்.' ]

158 தாதைக்குஞ் சடாயுவான தாதைக்குந் தமியளாய
சீதைக்குங் கூற்றங் காட்டித் தீர்ந்திலதொருவன் றீமை
பேதைப்பெண் பிறந்து பெற்ற தாயர்க்கும் பிழைப்பில் லாத
காதற்றம் பியர்க்கு மூர்க்கும் நாட்டிற்குங் காட்டிற் றன்றே.

கொண்டுகூட்டு: ஒருவன்தீமை, தாதைக்கும் சடாயுவான தாதைக்கும் தமியள் ஆய சீதைக்கும் கூற்றங்காட்டித் தீர்ந்திலது. (அது,) பேதைப்பெண் (ஆகப்)பிறந்து, பெற்றதாயர்க்கும் பிழைப்பு இல்லாத காதல் தம்பியர்க்கும் ஊர்க்கும் நாட்டிற்கும் (கூற்றத்தைக்) காட்டிற்று.

பொருள்: 'நான் ஒருவனுடைய தீவினையானது, (என்னைப் பிள்ளையாகப் பெற்றுவளர்த்த தசரதனான) தந்தைக்கும் (என்னைப் பெற்றபிள்ளையினும் உற்றபிள்ளையாகத் தழுவிக்கொண்ட) சடாயுவான தந்தைக்கும் (இராவணனால் என்னைவிட்டுப் பிரிக்கப்பட்டுத்) தனியளான சீதைக்கும் எமனைக் (கொண்டுவந்து) காட்டி(ச் சாகச் செய்துவிட்டபின்பும்) நீங்கியதில்லை. (நீங்காது, அத்தீவினைசெய்ததென்னைபோலெனில் அது, சீதையென்ற) பேதைப்பெண்ணாகப் பிறந்து (இராவணனாற் கவரப்பட்டு இந்திரசித்தினால் கொல்லப்பட்டு, அந்த இந்திரசித்தைக்கொண்டு) என் தாய்மாருக்கும் குற்றமற்ற அன்புடைய என் தம்பியார்க்கும் (அயோத்தி) நகரத்தாருக்கும் (அந்நகரத்தாருள்பட்ட கோசல)நாட்டாருக்கும் (கூற்றுவனைக்) காட்டி (மரணத்தை உண்டாக்கி)யது.'

தாதை - தந்தை - தகப்பன். தமியள் - தனிமையானவ்ள். கூற்றம் - எமன். தீர்தல் - நீங்குதல். தீமை - தீவினை - பாவம். பெண்பிறந்து - பெண்ணாகப்பிறந்து. பிழைப்பு - பிழைத்தல் - பிழைசெய்தல். காதல் - அன்பு. அன்று ஏ அசைகள்.

பாடபேதம்: [1] தவிர்ந்திலது.

[ 'அந்தோ! அங்கேயுள்ளவர்கள், இங்கே நிகழ்ந்தவைகள் ஒன்றையும் அறியார். அவர்களை இந்திரசித்து நாகபாசத்தினால் கட்டிக் கொன்றானாயினும், பிழைப்பித்தற்குக் கருடன் வாரான்: சஞ்சீவிமருந்தைக்கொண்டுவருதற்கு அவர்களுக்கு அனுமானில்லை. நான் போய் உதவினாலொழிய, அவர்களுக்கு வேறுதவி இல்லை.'

### இராமன் 'ஆகாயவழியேபோக உபாயமுண்டோ' என வினவ, இலக்குமணன் கூறுதல்

'நாம் ஆகாயவழியே போவதற்கு உபாயமுண்டோ? நான் போய் இந்திரசித்தைக் கொன்று திரும்பியபின், இங்கே செய்ய வேண்டியதைச் செய்வேன்' என்றான் (இராமன்). அதற்கு விடையாக, இலக்குமணன் கூறியது வருமாறு:—

'பரதனுடன் பொருதற்கு, இந்திரசித்தோடு மூன்றுலகத்துள்ளோரும் சேர்ந்துபோனாலும், (பரதனம்பினால்) எல்லாரும் ஒருமிக்க எரிந்தொழிவார்கள். நீ வீணாகச் சஞ்சலமடையவேண்டியதில்லை. தீயோன் பிரமாத்திரத்தினால் செத்துவிழுதற்குப் பரதன் நான் (என்னைப்போல எளியவன்) அல்லன். நீ, அங்கேபோய்ப் பரதனால், அந்தக் கொடியோன் கூட்டிக்கொண்டுபோன கூட்டத்துடனே குத்துண்டு கூக்குரலிட்டு மாண்டு மண்ணிற்கிடத்தலைக் காண்பாய்' (பரதன் முதலியோர் அபாயநிலையைப் பார்ப்பாயல்லை) என்று இலக்குமணன் கூறினான்.

### அயோத்திக்குச் செல்லுதற்கு இராமலக்குமணரைத் தன்மீது ஏறும்படி அனுமான் வேண்டல்

'ஐயன்மீர், என் தோள்மேலாவது (மருத்துமலைகொணர்ந்த) உள்ளங்கையிலாவது ஏறிக்கொள்ளுங்கள், இந்தக் கணத்திலேயே அயோத்திக்குக்கொண்டுபோய்விடுவேன். (அனுமதியளித்தால்)

தனியேபோய்ப் பகையை ஒழிப்பேன். "எழுபதுவெள்ளம் வானர சேனையோடு இலங்கையைத் தோண்டியெடுத்துத் தோள்மேற் கொண்டுபோ" என்று திருவாய்மலர்ந்தருள்வாயானால், அப்படியே செய்வேன். இறைப்பொழுது தாமதித்தலும் தெற்கு? புட்பகம் போய்ச்சேர்தற்குமுன், கணப்பொழுதிற்குள்ளே, குரங்குக்கூட்ட மனைத்தையும் சுமந்துகொண்டு, கூற்றுவன்போல அங்கே போய்க் குதிப்பேன்.' (இப்போது கொல்லப்போகிற நீ, அப்போதே வன் கொன்றுயில்லையெனில் கூறுகின்றேன்:—)

'சீதையைக் கொல்வதைத் தடுக்க (இந்திரசித்தைக் கொல்ல முயன்றால், அவன் தான் கொல்லப்படுமுன் அவளைக் கொன்று விடுவானென்று) நீதி கூறினேன். அதனை அவன் பொருட்படுத் தாமல் அவளைக் கொன்றிட்டான். அந்தத் துன்பத்தால் தரையில் விழுந்து, உணர்வை இழந்தேன். உணர்வுதிரும்புமுன், ஒழிந்து போய்விட்டான். இப்படியில்லாமற்போனால், எப்படிப் பிழைத் திருப்பான்? (என்னாற் கொல்லப்பட்டுச் செத்தேபோயிருப்பா னென்றபடி). மனத்திலும் விரைவாகச்செல்லும் புட்பகவிமானம் போனவழியே, அது பிந்தும்படி, அதிவேகமாகச் சென்று, அயோத்தியை அடைந்து, அந்த விமானம் வருந்திசையை நோக்கி எதிர்பார்த்துநிற்பேன். இன்னும் தாமதமென்னே? புட்பகத் துக்கு முந்திப்போதற்கு நீங்கள் இருவீரும் என் தோள்மேல் ஏறுங்கள்' என்றான் (அனுமான்).

### விட்டணன், 'சீதையைக்கோன்ற உண்மையைத் தேரிந்துவருகிறேன்' என, இராமன் இசைதல்

இராமலக்குமணர், அனுமான்தோள்மேலேறத்தொடங்கிய போது, விபீடணன், 'சீதாதேவி கொல்லப்பட்டாளென்று கூறக் கேட்ட துன்பத்தினால், மனங்கலங்கித் திகைத்துச் செய்யவேண் டியதைச் சிந்தியாதொழிந்தேன். இப்போது, தெளிவுவரப்பெற் றுத் தேவிவதை மாயமென்று சந்தேகிக்கின்றேன். உன் பத்தினி யைப் பாதகன் (தீண்டுதல்மட்டும் செய்திருந்தாலுமே, மூன்றுலக மும் சாம்பலாயிருக்கும். அவ்வாறாக, அவன் அவளைத்) தீண்டிக் கொலைசெய்திருந்தால், (அந்த) மூன்றுலகமும் எரிந்து சாம்பலா

யொழிந்திருக்கும், (என்பதைக் கூறவேண்டுமோ! நிகழக்கூடாத) அச்செயல், ஒருகால் நிகழ்ந்திருந்தாலும், அயோத்திமேற்செல்வ தாகக் கூறிய வார்த்தை பொய்யே. யான், இமைக்குமுன் சீதா தேவியிருக்குமிடத்துக்குப்போய், நிகழ்ந்ததைத் தெரிந்துவந்து சொல்லியபின்பு, செய்தற்குரியதைச் செய்யலாம்' என்றுகூறினன் (விபீடணன்). 'அப்படியேசெய்க' என்றான், இராமன்.

### விபீடணன் வண்டுருவங்கொண்டுசென்று சீதையைக்கண்டுவந்து கூறல்

விபீடணன், வண்டுருவங்கொண்டு அசோகவனத்துக்கு, இராமன்மனம்போல (இராமன் மனோபாவனையாற் சென்றது போல)ச் சென்று, அங்கே சித்திரிகசிரேட்டர் கையினாற்செய்வதினும் சிறந்ததாகக் கருத்தினாற்செய்த சித்திரப்பாவையை(ப் பேரழகினாலும் பிரிவுத்துயரால் உயிர் உண்டோ இல்லையோ என்று சொல்லும்படி அசைவற்றிருத்தலாலும்) ஒத்திருந்த சீதையைக் கண்களால் (பிரத்தியட்சதரிசனமாகக்) கண்டான். அந்தச் சமயம், அவள், 'என் துன்பத்தை என்று உயிரோடொழிப்பே'னென்று சாகத்துணிய, அத்துணிவைத் தேறுதல்வார்த்தைகூறித் திரிசடை மாற்ற, விடத்தையுட்கொண்டார்போலத் துன்பத்தையுட்கொண்டிருந்தவள், விடத்தின்தீங்கு அமுதத்தால் நீங்குதல்போலப் பிரமாத்திரத்தால் இராமனாதியரெல்லாரும் மாண்டார்களென்ற துன்பம், அவர்கள் சஞ்சீவிமருந்தால் எழுந்து ஆர்த்த ஆரவாரத்தினால் நீங்கப்பெற்றிருந்த சமயமாயிருந்தது. கொன்றது, உண்மைச் சீதையையன்று, மாயச்சீதையையென்று தெரிந்து மகிழ்ந்த விபீடணன், 'இந்திரசித்து நிகும்பலையில் வேள்விசெய்யப்போனா'னென்று கூறிக்கொண்டு, வேள்விக்குவேண்டிய விறகுநெய்முதலிய எண்ணிறந்த உபகரணப்பொருள்களுடன் இராக்கதர்கள் அங்கே போவதைக் கண்டு, சீதைவதையும் அயோத்திப்பயணமும் இந்திரசித்தின் தந்திரவித்தைகளென்று சிந்தித்துத் தெளிந்து இராமனை அடைந்து, 'உன்தேவியைக் கண்ணாரக்கண்டேன். இந்திரசித்து,

(நம்மை வெற்றிகொள்ளுதற்குரிய சித்திபெறும்பொருட்டு யாகம் செய்வதை நாம் தெரிந்து தடுத்து அழித்துவிடாதபடி) மாயஞ் செய்து, நாம் வருந்தும்படி (ஏமாற்றுதல்) செய்துவிட்டு, நிகும் பலைக்குப் போயிருக்கிறுன். வேள்வியை முடித்து நம்மை முடிக்க மூண்டிருக்கின்றுன்' என்றுன்.

அதுகேட்டு வானரர் மகிழ்தல்

அதுகேட்டு, மகிழ்ச்சிமீக்கூர்ந்து, 'இது, ஏழுகடலும் ஒருமித் தெழுந்து ஒலிக்கின்ற பேரோசையோ? வேருேரோசையோ? என்று (அதிமேதாவிகளான) விண்ணவரும் ஐயுறும்படியான ஆரவாரஞ் செய்து, குன்றுகள் குலையும்படி குதித்துக் கூத்தாடின குரங்குக் கூட்டங்கள். ]

மாயாசீதைப்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1941-ஆம்ஞூ ஏப்ரல்மாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1941 ஏப்ரல | வரவு 1940 ஏப்ரல் | விவரம் | செலவு 1941 ஏப்ரல் | செலவு 1940 ஏப்ரல் |
|---|---|---|---|---|---|
| I General Section: | | | I General Section: | | |
| (1) மாதச்சந்தாவகையில் அடியிற்கண்டபடி வரவு:— | | | (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 105 8 ... | |
| a. இராமநாதபுரம்எஸ்டேட்தர்மமகமைபண்டிலிருந்து 1941-ஞூ மார்ச்சுமீ சந்தா வரவு ரூ 100 | | | (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 ... ... | |
| b. மதுரை முனிசிபாலிடியிலிருந்து சங்கம்லைப்ரேரிக்கு 1940-1941-ஆம் ஞூத்திக்கு கிராண்டு வரவு ரூ, 70 | | | (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது. ... | 78 3 7 | |
| | | | (4) Stationery contingencies வகையிற்செலவு ... | 4 13 8 | |
| ஆக ரூ 170 | 170 ... ... | | (5) சங்கம்புத்தகசாலைக்குவரும் பத்திரிகைக்குச் சந்தா செல்லாக்கியது ... | 6 9 ... | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) சங்கச்சாலியிடத்துக்கு மாத வாடகை வரவு ... | 30 | ... | ... | | | |
| (3) Miscellaneous வரவு ... | 9 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 209 | 8 | ... | 255 | ... | ... |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| சங்கப்பதிப்புப்புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 35 | 7 | ... | 42 | 13 | 6 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (6) தபால், தந்திவகையிற்செலவு | 3 | ... | ... | | | |
| (7) லாண்டுரெவினியூ செல்லாக்கியது ... | 3 | 13 | 10 | | | |
| (8) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலிவகையிற் செலவு. | 5 | 8 | .. | | | |
| (9) சங்கப்பரீக்ஷைசம்பந்தமாகச் செலவு ... | 20 | 6 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 262 | 14 | 1 | 592 | 10 | 3 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 78 | 3 | 7 | | | |
| (2) சங்கப்பதிப்புப்புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கன்டின்ஜன்வி வகையிற் செலவு ... | 15 | .. | 7 | | | |
| (3) தபால், தந்தி வகையிற் செலவு. ... | 2 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 95 | 4 | 2 | 101 | 8 | 3 |

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| **III Press Section:** | | | | | | | **III Press Section:** | | | | | | |
| சங்கவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி வகையில் வரவு | 5 | 8 | ... | 68 | 8 | ... | (1) அச்சாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 38 | 8 | ... | | | |
| | | | | | | | (2) ஷை ஆபீஸ் **Stationery contingencies** வகையிற் செலவு. | 1 | ... | 6 | | | |
| | | | | | | | மொத்தம் ரூ. ... | 39 | 8 | 6 | 21 | 9 | 10 |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 250 | 7 | ... | 366 | 5 | 6 | ஆக மொத்தம் செலவு ரூ ... | 397 | 10 | 9 | 715 | 12 | 4 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்பு ரூ ... | 3352 | 10 | 8 | 693 | 15 | 7 | மாத முடிவில் மீதி இருப்பு ரூ ... | *3205 | 6 | 11 | 344 | 8 | 9 |
| ஆகமொத்தம் ரூ ... | 3603 | 1 | 8 | 1060 | 5 | 1 | ஆகமொத்தம் ரூ ... | 3603 | 1 | 8 | 1060 | 5 | 1 |

*By M. R. C. C. Bank Pass Book in current account Rs. 2613- 7- 0
Amounts under suspense account 145- 8- 0
Cash on hand Rs. 446- 7-11

3205- 6-11

குறிப்பு:—மேலேகண்ட விவரப்படி இம்மாதமுடிவில் மீதி இருப்பு ரூ. 3205-6-11 தவிர, ஆபீஸ் மூலதனங்களாக உள்ளவை:—மதுரை M. R. C. C. Bankல் வட்டிக்காக Fixed Depositல் வைக்கப்பட்டுள்ள மூலதனங்கள் (1) ரூ. 25011-5-0; (2) ரூ. 1050-0-0; (3) ரூ. 1001; மதுரை இந்தியன்பாங்கில் வட்டிக்காக Fixed Depositல் வைக்கப்பட்டுள்ள மூலதனங்கள் (1) ரூ. 10000; (2) ரூ. 10000; (3) ரூ. 5000; காரைக்குடி மகா-ள-ள-ஸ்ரீ கா. சுப. காம. நாராயணன்செட்டியாரவர்களின் ரங்கூன் அடுமேன்கடையில் வட்டிக்குக்கொடுக்கப்பட்டுள்ள மூலதனம் ரூ. 1,200 ஆகும்.

Audited and found correct,
V.S. RAMASWAMI, AUDITOR, 3—5—'41.

LAKSHMINARAYANAN,
MANAGER, 2—5—'41.

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| No. | Title | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | ஐந்திணையைம்பது (உரையுடன்) ... ... | 0 | 4 | 0 |
| 2. | கணுநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் ... ... ... | | | |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | *நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | | | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 6 | 0 |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) .. | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 10 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 11. | *விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் ... ... | | | |
| 12. | *பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23. | *விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவிஞவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை... ... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை... ... ... | 0 | 8 | 0 |
| 28. | *சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | | | |
| 30. | ஞானமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35. | *திருமந்திரநூறுபாட்டுக்குறை ... ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | | | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | *கடைவள்ளலார்காலம் ... ... ... | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் (தமிழ்) ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை (ஆங்கிலம்) ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா ... ... ... | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில்அந்தாதி ... ... | 0 | 6 | 0 |
| 61. | கலைசைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை ... ... ... | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை ... | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் ... ... ... | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தரஞ்ஜநி ... ... ... | 0 | 2 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்" செந்தமிழ் "ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ 4—8—0. இதுவரை 37 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன்தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணா வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மிநாராயணையர், மானேஜர்.